# திருக்குறிப்புத் தொண்டர்



தமிழ்ப்புலவர்
மணி. திருஞான சம்பந்த முதலியார்
எழுதியது.





கே. பழனியாண்டிப்பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

 [விலை அணா 2.

# நூன்முகம்.



திருக்குறிப்புத் தொண்டர் என்பவர் சைவசமயத்து அருந்தவத் தொண்டர்கள் அறுபத்து மூவருள் ஒருவர். அவரது அற்புதச் செய்கை ஒவ்வொருவர் உள்ளத்தையும் உருக்கும்; ஒப்பில்லா ஈசனது பத்தியின் பெருமையையும் இனிது விளக்கும். சரித்திரப்போக்கும், நடைப்போக்கும் மாணவர்கள் மனத்தைக் கவரும். இயற்கை அழகுகளும், கற்பனை அழகுகளும் சிற்சில இடங்களில் சிறந்து மிளிரும். தமிழுலகம் இந்நூலை அன்புடன் ஏற்று, என்னை இத்தகைய முயற்சிகளில் இன்னும் ஊக்குமாறு இறைவன் இன்பவடிகளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்:

மணி. திருஞான சம்பந்தன்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருக்குறிப்புத் தொண்டர்



"யானே பொய்யென் னெஞ்சும் பொய்யென் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின் தெளிவே தித்திக்கு
மானே யருளா யடியேன் உனைவந் துறுமாறே."

(மணிவாசகப் பெருமான்)

## I

தொண்டை நாடு அருந்தவத் தொண்டர்களால் பெரும் புகழ் வாய்க்கப்பெற்றது. 'தொண்டை நாடு சான்றோர் உடைத்து' எனவும் அறிஞர் சொல்லியிருக்கின்றனர். அதனால் இந்நாட்டிற்குத் தனிச் சிறப்பு உண்டு. பால் போன்ற குளிர் நீரைத் தரும் பாலாறு ஈண்டுச் செல்லுகின்றது. பாலாற்றின் பேரழகை வருணிக்க நம் புலவர் திலகராகிய சிவஞான முனிவர்க்கே தகும். பெரியோர்கள் வறுமை வந்த காலத்திலும் தங்கள் உடலை மிக வருத்தி ஏழைகளுக்கு அன்னம் அளிப்பார்கள். அதுபோல கோடைகாலத்திலும் பாலாறு தன்னை அடைந்தவர்க்கு இளநீரினும் இன்பம் மிகுந்த பனி

நீரைக் கொடுக்கும். இந்நாடு திருமயிலை, திருவொற்றியூர், திருவான்மியூர், திருமுல்லைவாயில், திருவாலங்காடு, திருக்கச்சூர், திருக்கழுக்குன்றம் முதலிய பல திவ்விய புண்ணியப் பதிகளை உடையது.

இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த தொண்டை நாட்டில் தலை சிறந்தது காஞ்சிமாநகரம். இப்புண்ணியத் திருநகரில் எங்கும் சிவாலயங்கள் நிறைந்து மிளிரும். விசாலமான வீதிகளில் கல்விக்கழகங்கள் சிறந்து ஒளிரும். இடையிடையே தென்னஞ் சோலைகள் திகழ்ந்து நிற்கும். மல்லியும், முல்லையும் மனையெலாம் மணம் வீசும். திருக் குளங்களின் அழகு கண்களைக் கவரும். திருமாளிகைகளின் வனப்பு இன்னை யூட்டும். எப்போதும் மங்கல வாத்தியங்கள் முழங்கிச் சிறக்கும். என்றைக்கும் திருவிழா பொலிந்து மணக்கும். மக்கள் என்றும் காண்பது ஈசன் திருவடியே; அவர் நாவில் என்றும் ஒலிப்பது இறைவன் திருநாமமே. எங்கும் வீசுவது தெய்வத் திருமணமே ; எவரும் பேசித் திரிவது அண்ணலார் திருப்புகழே; எவரும் ஆடும் கூத்து ஆனந்தத் திருக்கூத்தே ; எவரையும் உருக்குவது அழகிய வெண்ணீறே. எங்கும் பொழிவது கருணை மழையே ; எவரும் சொல்வது சிவ கதையே. பெரியோர் போற்றுவது நன்னடையே ; சிறியோர் பூண்டதும் பொன்னடையே. கற்றோர்

விளைவது திருப்பணியே ; மற்றோர் புரிவதும் அப்பணியே. எங்கும் தழைப்பது தவஞானமே; எவரும் உண்பது சிவஞானமே. ஆதலால், காஞ்சிமா நகர் வானுலகினுஞ் சிறந்ததே. விண்ணவரும் அப்பதியில் வசிக்க விழைந்தனர் என்றால், அதன் பெருமையைச் சொல்ல எவரால் முடியும்?

அத்தெய்வத் திருநகரில் மக்கள், குலத்தைப் பெரிதாக எண்ணவில்லை ; குணத்தைத் தான் பெரிதாக எண்ணினார்கள். அவர்கள் செல்வத்தைப் பொருளாக மதிக்கவில்லை ; பத்தியைத் தான் பொருளாக மதித்தார்கள். ஆதலால், அப்பதியில் சாதிக்கு உயர்வுமில்லை, தாழ்வுமில்லை. இருப்பினும், தொழில்கள் வேறுபாட்டால் பல குலங்கள் இல்லாமல் இல்லை. அக்குலங்களில் அதுபோழ்து பெருமை பெற்று விளங்கியது வண்ணார் குலமே. ஏனெனில், அக்குலத்தில் சிறந்து திகழ்ந்தார் ஒரு பெரியார்.

செல்வத்திலும், வயதிலும் பெரியவர் பெரியார் அல்லர். கல்வியில் பெரியவரும் பெரியார் அல்லர். ஈசன் பத்தியிலே சிறந்தவரே பெரியார்; அடியார் பத்தியிலே முதிர்ந்தவரே பெரியார்; எவரும் செய்தற்கு அருமையான செய்கை செய்பவரே பெரியார் ; உயிர் போவதாயிருப்பினும் பத்தியை விடாதவரே பெரியார் ; குணக்குன்றாய்த் திகழ்பவரே பெரியார் ; குழவிபோல் களங்கமற்றவரே பெரியார்.

இவ்வளவு மணிபோன்ற குணங்களையும் உடையவரே நாம் மேற்கூறிய பெரியார். அவர் ஒப்பற்ற பெருமையைச் சொல்ல, ஆயிரம் நாப் படைத்த ஆதிசேடனாலும் ஆகாது. அவர் பிறந்தபோதே வண்ணார் குலம் வளமுறு செல்வம் பெற்றது. அக்குலத்தார் வழக்கமாய் நவிலும் சிறு பொய்களும் மாயமாய் மறைந்தன. ஒவ்வொரு வண்ணானும் போட்ட ஆடைகளில் ஒன்றையும் மறைக்காமல் கொண்டுவந்து கொடுத்தான். எந்த வண்ணானும் எவரிடத்தும் ஒரு கடுமொழியும் கேட்கவில்லை. அவர்கள் சொல் நாணயம் மிகச்சிறந்து விளங்கியது. எல்லா மக்களும், வண்ணார் மிக உத்தமர்கள் என்று சொல்லிப் புகழ்ந்தனர். மொத்தத்தில் ஒரு சிறுபிள்ளையும் வண்ணான் என்றால் எல்லா விஷயங்களிலும் அவனை நம்பிவிடும். உண்மையும் சொல்லி, ஆடைகளில் ஒன்றையும் களவாது கொண்டு வந்து கொடுத்ததால், செல்வ நாயகியாகிய இலட்சுமியும் அக்குலத்தில் வாசஞ் செய்தனள். உயிர்க்குற்ற துணையாகிய அழகிய அன்பும் அவர்கள் உள்ளத்தில் குடியேறியது. இவ்வளவு சீர்திருத்தங்களுக்குங் காரணம் நம் பெருந்தகை நாயனாரே. ஏனெனில், அப்புண்ணியர் இளமைப் பருவத்திலேயே உண்மையையும், சொல் நாணயத்தையும் எல்லோரும் வியக்குமாறு ஒவ்வொரு செய்கையிலும் காட்டி வந்தனர். அவர்

சத்தியவந்தனென்றும், நிகரிலாப் பத்திச்சிரோ மணியென்றும் மிகச் சிறுவயதிலேயே பெயர் பூண்டனர்.

நாயனார் கல்வி ஞானம் இல்லாதவரென்று சொல்ல முடியாது. கல்வி என்றால் பல அரிய விஷயங்களைக் கற்றுக்கொள்ளுதல் என்றுதானே பொருள். பல விஷயங்களைத் தெரிந்துகொள்வதால் ஒருவருக்கு அறிவு அல்லவோ விருத்தியாகும்? அறிவு விருத்தியானால் குணங்களும், செய்கைகளும் அல்லவோ சிறக்கும்? ஆகலால் கல்வியின் பயன் அறிவு என்றும், அறிவின் பயன் நற்செய்கை யென்றும் நாம் சொல்ல வேண்டியதில்லை. எனவே நம் நாயனார் எழுதப் படிக்கத் தெரியாமல் இருந்தாலும், கல்வியின் முழுப் பயனாகிய நற்செய்கையை முற்றிலும் பெற்றமையால், அவர் மிகச் சிறந்த கல்விமானே.

இப்போது அநேகர் கல்வி என்றால் பெரிய உத்தியோகத்தைப் பெறுவதற்குத் தகுந்த கருவி யென்றும், பலரும் தம்மைப் புகழ்வதற்கு ஏற்ற அரும்பொருளென்றுமே நினைக்கிறார்கள். இது முற்றிலும் தவறு. உண்மைக் கல்வி என்பது ஒருவனது அறிவை விருத்தி செய்து, அவன் செய்கையைத் திருத்தி, உலகில் பெரியவனாக்கி, இறைவன் பத்தியைப் பெறச்செய்வதே ஆகும். தான் பெரியவன் என்று பிறருக்குத் தெரிந்தாலும், தெரியாமற்போனாலும் குற்றமில்லை; ஒருவன்

தன்னை மெச்சிப் பேசினாலும், பேசாமற் போனாலும் அவசியமில்லை; நன்மையையே கடைப் பிடித்து, வாய்மையிலேயே நின்று, நம்பீசன் அருளையே துணையாகப்பற்றினவன்தான் நம்மை எல்லோரையும் ஆளும் பெரியவன்; அவனே தான் கல்வியாளர்களுக்கெல்லாம் தலைவன். ஆதலால், நம் நாயனார் எல்லா உத்தியோகஸ்தர்களைக் காட்டிலும் பெரியவரே; அப்புண்ணியர், புலவர்களுக்கெல்லாம் செழுந் தலைவரே; உயர் குலத்தார்க்கெல்லாம் பெருநாயகரே. அவர் திருவடிகள் பொன்னினும் மணியினுஞ் சிறந்தவைகளே.

பழுத்த ஞானமே ஓர் உருவாய்த் தோன்றியவர் நம நாயனார். ஆதலால், அவர் தாய்தந்தையர் அவரைப் பள்ளியில் வைக்காமற்போனாலும், பல அறிவாளிகளுடைய பிரசங்கங்களையும் உபந்நியாசங்களையும் நாயனார் சிறுவயதிலேயே பேரவாவுடன் கேட்பது வழக்கம். எவ்விடத்தில் யார் என்ன சொன்னாலும் நாயனார் அங்குச் சென்று அவர் சொல்வதைக் கேட்பார். "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு," என்ற பெரியவர் பொன்னுரை அவருக்கே பொருந்தும். கல்வியின் நுணுக்கங்கள் பலவற்றைப் பல பெரிய சபைகளில் நடந்த உபந்நியாசங்களால் நாயனார் அறிந்துகொண்டார். அவர்

விபூதியின் பெருமையையும், உருத்திராக்கத்தின் பெருமையையும நன்கு உணர்ந்திருந்தனர். அவர் விபூதியும், உருத்திராக்கமும் அணிந்தவர் எவராயிருப்பினும் அவர்களைக் கரமலர் குவித்து வணங்குவார்; அவர்களைக் கடவுளாகவே எண்ணுவார். அடியவர் என்றால் திருநீறும், கண்டிகையும் பூண்டவர் என்பதுதான் நாயனார் கருத்து அவர்கள் உண்மைப பக்தர்களா அல்லரா என்பதைப் பற்றி அவர் சிந்திப்பதில்லை. போலிஅடியார்களையும் அவர் உண்மை அன்பர்களாக வணங்கியதால், அவர்கள் மெய்யடியார்களாகவே மாறிவிட்டனர் சிறு குழந்தையும் விபூதியும், உருத்திராக்கமும் அணிந்திருந்தால், நாயனார் அதைக் கைகுவித்து வணங்குவார். ஆதலால், கொடியவர்களும் நாயனாரிடத்தில் மிக அன்போடு உறவாடினார்கள். அவருக்கு நல்லவர் எவரென்றும், தீயவர் எவரென்றும் தெரிவதேயில்லை, அவருக்கு எல்லோரும் நல்லவரே. சிறு குழந்தையும் அவரைக் கண்டால் உள்ளம் உருகித் தலை வணங்கும்.

நாயனார் தாழ்ந்த குலத்திற் பிறந்தோமே என்று சிறிதும் வருந்தவில்லை; கல்வியில்லையே என்றும் கருதவில்லை; செல்வம் இல்லையே என்றும் நினைக்கவில்லை; நண்பர் இல்லையே என்றும் எண்ணவில்லை. அப்புண்ணியருக்குக் குலம், கல்வி, செல்வம், கிளை, நட்பு எல்லாம் அடிய

வரே; அவர் பூரிப்பெல்லாம் அவர்களுக்குத் தாம் பணி செய்வதே. அவர் பெருமையெல்லாம் அடியார் மனத்தை மகிழ்விப்பதே. கொடிறும் பேதையும் கொண்டது விடா. அது போல் நாயனார் அடியார் அன்பைத் தமது திருவுள்ளத்தில் பசுமரத் தாணிபோல் பதித்து வைத்தார். அன்னவர் பெருமையை எம்மனோர் புகழ்தற்கு ஆமோ?

பெருந்தகையார் எப்போதும் மாசற்ற ஆடையே அணிவார். அவர் உள்ளம்போல அவரது திருமேனியும் பரிசுத்தமா யிருக்கும். அவர் குலத்தொழில் அழுக்காடையை வெளுக்கச் செய்வதே யென்றாலும், அது மக்களுக்கு மிகச் சிறந்த திருப்பணியே என்று எண்ணினர். ஆதலால், அவர் விபூதி, உருத்திராக்கம் தரித்த எவருக்கும் காயமறன்வந்து அவரது ஆடையைப் புனிதமாக்கி அளிப்பது வழக்கம். அவர் ஆடைகளைப் புனிதமாக்கியதால், அநேக மெய்யடியார்கள் உள்ளமும் புனிதமாயிற்று. நாயனார் சுறுசுறுப்பும் விடா முயற்சியும் பெற்றவர்; அவர் பணிசெய்ய எக்காலத்திலும் தளர மாட்டார். அவர் ஒப்பில் உழைப்பும், சொல் நாணயமும் அவரைத் தலைசிறந்தவராகச் செய்தன. ஆதலால், அவருக்கு ஊதியம் தாராளமாகக் கிடைத்தது. எனவே நாயனாருக்குக் குடும்பக்கவலை சிறிதுமே இல்லை. அவர் தம் குடும்த்

தாரோடு, வயிறார உண்டு, அநேக ஏழைகளுக்கும் வயிறார அமுது படைத்தனர்.

வண்ணார்கள் எல்லோரும் நாயனாரைத் தங்கள் தலைவராக மதித்து அவர் சொற்படியே நடந்து வந்தனர். அவர் முன் எந்த வண்ணானும் நின்று பேச அஞ்சுவான். நாயனார் சொல் லென்றால் அவர்களுக்குத் தெய்வ வாக்கு. அத் திருவாளரைக் கண்டால் அவர்களுக்குக் குதூகலம் அதிகம். அவர் பெருமையைப் பேச அவர்களுக்கு எப்போதும் விருப்பம். அவர் நற்குணப்பொலிவை அறியாதார் ஒருவரும் இலர். அவரது திருப்புகழ், திருநகர் முழுதும் பரவியது.

நாயனார், குறிப்பு அறிந்து அடியார்களுடைய அழுக்காடையைப் புனிதமாக்கிக் கொடுத்தமையால், அவருக்குத் திருக்குறிப்புத்தொண்டர் என்னும் திருநாமம் வழங்கியது.

## II

நாயனார் தம் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் கடவுள் திருத்தொண்டிற்கே உபயோகித்தனர். அவர் ஒரு கணப்போதும் ஈசனை நினையாதிரார். அப்புண்ணியர் எப்போதும் எல்லோரிடத்தும் இறைவன் திருப்புகழையே பேசிப் பூரிப்பார். அவர் தமது திருமேனியை

அடியவர்க்கே உழைத்துக் குதூகலிப்பார். நாயனார் இப்பிறவியின் மாயத்தைச் செவ்வனே அறிந்தவர்; உலக வாழ்வு துரும்பென உணர்ந்தவர். எவரும் அழியாத பேரின்ப வாழ்வை ஏன் விரும்பக்கூடாது என்று அவர் எண்ணி இரக்கங் கொள்வார்; பொருளை நல்வழிக்கு உபயோகிக்காத அறிவிலிகள் முடிவில் அடைவது என்ன என மனம் வருந்துவார்; எல்லோரும் தம்மைப்போல ஏன் உலக வாழ்வை வெறுக்கவில்லை என்று அதிசயிப்பார்; அறிவை விருத்தி செய்தவனுக்கு உலகில் உண்மை இன்பம் உண்டோ என நினைந்து பரிதபிப்பார்; என்றும் நிலைபெற்று இருப்பவர்போல், மக்கள் வீண் டம்பங்கள் செய்து செருக்கடைவதைக் கண்டு நகையாடுவார், பல அறிவிலிகள் தம்மைப் பைத்தியக்காரர் என்று மறைவாகச் சொல்லிக் கொள்வதையும் அறிவார். அவர், "அந்தோ! பாவம்! என்னைப் பைத்தியக்காரன் என்று எண்ணுபவர் அல்லவோ பைத்தியக்காரர்கள்" என்று நினைந்து அவர்மீது இரக்கங் கொள்வார்.

நாயனார் இறைவன் பெருங் கருணையைத் தனியே நினைந்து, ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக வடிப்பார்; அப்போது பேசா மௌனம் பூண்டு பரம யோகநிலையை அடைவார். அவர் உள்ளம் புளகிப்பதையும், மயிர் கூச்செறிவதையும், வெண்ணகை மலர்வதையும் பார்த்த

புண்ணியவான்கள் பரமானந்தத்தில் அழுந்து வார்கள். அவருக்கு அவ்வளவு பத்தி எங்கிருந்து வந்ததென அநேகர் அதிசயிப்பார்கள். அப் பெரியார் நினைவில் பன்முறை ஒரு பெருஞ் சோதி தோன்றுவது உண்டு ஆனால், அது மாய மாய் மறைந்துவிடும். அவருக்கே அது இன்ன தென்று பின்னர்ப் புலனாவதில்லை. சிற்சில வேளைகளில் மதியணிந்த சடைவள்ளல் செழுந் தோற்றத்தை, நாயனார் கனவில் கண்டதுண்டு; பின்னர் ஒன்றும் அவருக்கு விளங்குவதில்லை. தவக்கோலப் புண்ணியத் தொண்டர்கள் ஒருங்கு கூடித் தெய்வ நடராச வள்ளல் முன்னா ஆனந் தத் திருக்கூத்து ஆடுவதுபோலப் பகல் வேளை களிலேயே தொழில் செய்யும்போதே நாயனார் பன்முறை கண்டதுண்டு. இவ்வாறு அவர் பல விதத் தோற்றங்களும், நிகழ்ச்சிகளும் பன்முறை காண்பதுண்டு.

அவர் இவ்வாறு ஒவ்வொரு நாளையும் தவநாளாகக் கழித்து வருகையில், குளிர்காலத் தில் ஒருநாள் அவர் திருமனைக்கு ஒரு பெரியவர் வந்தார். அப்பெரியவர் பரம ஏழையாகக் காணப் பட்டார் அந்தோ! பாவம்! அவர் அணிந் திருந்த ஆடை பெரிதும் கிழிந்திருந்தது. ஆடையில் இருந்த அழுக்கோ கருமேகம்போல் கறுத்திருந்தது. ஆனால், அவர் மேனி முழுதும் வெண்ணீறு சிறந்து திகழ்ந்தது; கழுத்தில்

உருத்திராக்கம் மிளிர்ந்து பொலிந்தது ; முகத்தினின்றும் தெய்வ ஒளி வீசியது; கண்களினின்றும் கருணை மழை பொழிந்தது. பெரியவர் திருமேனி முழுதும் பொன் மேனியாய்த் துலங்கியது அவர் அழுகிய வெண்ணகை உளத்தை யுருக்கிய பேரின்பை ஊட்டியது. அவர் தோற்றப் பொலிவு நம்பீசனது பொலிவேபோல் தோன்றியது. கொடிய வறுமை நோய் பிடித்தவர்போல, அப்பெரியவர் கிழிந்த அழுக்கு நிறைந்த ஆடையானது காட்டினும், ஈசன்போல உயர்ந்த தோற்றத்தையும் காட்டியது. அவரைக் கண்டபோதே கை கூப்பி வணங்கச் சிறுகுழந்தைக்கும் ஆசை எழும்.

பரம ஏழையாக வந்த பெரியவரைக் கண்ட போதே, சூரியனைக் கண்ட தாமரைபோல் நம் நாயனார் திருமுகம் மலர்ந்தது. அவர் தேகமெல்லாம் புளகித்தது; கண்களினின்றும் அன்பு நீர் பாய்ந்தது, அனைத்தெலும்பும் உள நெக ஆனந்தத் தேன் சொரிந்தது; அவர் தம்வசம் அழிந்து பரமன் வசமானார். பொங்கி எழுந்த பேரின்பை அடக்க வொண்ணுமல் ஆனந்தக் கூத்து ஆடினார். அவர் செயபபாடுகளை எல்லாம் கண்ட சிவனடியார் மெல்லிய சிறு நகை பூத்தார். ஆனால், அவர் மிகக் களைபபோடும், இளைப்போடும் குறுநடை நடந்து, பெருந்தளர்ச்சியுடன், மேனி குளிரினால் நடுநடுங்க, மிகத் தவிப்பவர் போல, உட்கார இடந் தேடினார்.

நம் நாயனார் அடியவரை நோக்கி, "சுவாமி! வருக! வருக! தேவரீர் திருவடி பட்ட என் மண் வீடு பொன்வீடாயிற்று. என் உள்ளம் புனிதமாயிற்று. நான் பெற்ற செல்வம் யார் பெறுவார்? என் புண்ணியமே புண்ணியம்! என் பூரிப்பே பூரிப்பு! என் ஈசன் போலவே துலங்கும் தவமணியே! புண்ணியக் கொழுந்தே! வருக! வருக!" எனப் பேரன்புடன் மொழிந்து, அவரை ஒரு பீடத்தில் அமர்த்தி, அவருடைய திருப்பாதங்களை வணங்கினார்.

நாயனார், அடியவர் பாதங்களில் விழுந்து பன்முறை நமஸ்கரித்தபின், வந்த புண்ணியரை நோக்கி, "தாங்கள் யாரோ? தேவரீர் திருநாமம் யாதோ? இச்சிறியேன் மனையை நண்ணியதின் காரணம் யாதோ! என் பொருளற்ற வினாக்களுக்குத் தாங்கள் பதில் சொல்ல வேண்டியதில்லை. ஏழையேன் வாயில் வந்தவற்றைப் பிதற்றினேன். என் சுவாமி! என் வாழ்வே! இவ்வளவு தூரம் நடந்து வந்த தேவரீர் திருவடிகள் நோகுமே! இதோ வந்து விடுகின்றேன். சிறிது பொறுத்துக் கொள்ளுங்கள்," எனக் கூறி விரைந்தோடி வெந்நீர் கொணர்ந்து, அடியவர் திருப்பாதங்களை விளக்கித் தமது மனையில் கிடைத்த திருமலரைச் சூட்டிக், கற்பூர தூபம் காட்டிச் சிந்தை முழுதும் சிவன்பால் வைத்து, அன்புருகி நின்றனர்.

பின்னர் நாயனார் காற்றினும் விரைந்து

சென்று, அமுதினும் சுவை மிகுந்த வெந்நீரைச் சுத்த பாத்திரத்தில் கொணர்ந்து, அடியவர் குடிக்கத் தந்தனர். வந்த அடியவரும் மிகக் களைத்திருந்தமையால், அந்நீரை அவாவுடன் வாங்கி அருந்தி, "ஓ நாயனுரே! தீர்ந்தது அடியேன் களைப்பு. இவ்வேலைமேல் நீர் வைத்த கருணை மிகவும் அழகுடைத்து; உமது திருப் பணி மிகப் பெருமையுடைத்து," எனக்கூறி ஆயாசம் தீர்ந்தவர்போல் சிறிது அமைதியுடன் இருந்தனர். நாயனுர் அடியவரை நோக்கி, "நாயினும் கடைப்பட்ட சிறியேனையும் தேவரீர் ஒரு பொருளாகமதித்துப் புகழ்ந்தீர்கள். நானே அவ்வளவு பாக்கியத்திற்கு உரியவன? இல்லை, இல்லை. சுவாமிகளே! என் பிழையைப் பொறுத்தருளல் வேண்டும். இதுகாறும் தேவரீரைக் காக்கவைத்தேன்," எனக் கூறி அவர் திருவடிகளை இன்புறத் தடவிப் பிடித்துப், பணிவு நிறைந்த பல பொன்மொழிகள் சொல்லிக்கொண்டிருந்தனர்.

அடியவர், நாயனர் அருஞ்செய்கையைக் கண்டு மிகவும் மகிழ்ந்து, "ஓ நாயனுரே! இஃதென்ன விந்தை! கரித்திரமே ஓர் உருவாக வந்த பரம யேழையாகிய என்னையா நீர் இவ்வளவு போற்றுவது? இச்செய்கை நான் எங்கும் கண்டிலேன். உலகில் உம்மைப்போல் ஒருவரும் இரார். பட்டுப் பீதாம்பரமும், வைரக்கல் மோதிரமும் அணிந்தவருக்குக் கிடைக்கும் மரியாதையினும்

சிறந்த மரியாதை உம்மிடத்தில் எனக்குக் கிடைக்கிறது மிகவும் வியப்பே! நல்லது, அது நான் செய்த பாக்கியம். எனக்கு இளைப்பும், களைப்பும் தீர்ந்தன ; பேரின்பமும் உண்டாயிற்று. உமது திருப்பணி ஓங்கிச் சிறக்க வேண்டும், உமது அரும் புகழ் எங்கும் பரவவேண்டும்; உமக்குச் சகல செல்வங்களும் பெருக வேண்டும்; சகல இன்பங்களும் மல்கவேண்டும். நான் போய் வருகிறேன். எனக்கு உத்தரவு அளிக்கவேண்டும்" எனக் கூறி எழுந்தனர்

நாயனார், "சுவாமி! சிறிது நிற்கவேண்டும். என் சிறுமை எல்லாம் பொறுத்தருளி, என்னை வாயார வாழ்த்திய தேவரீர் பெருங் குணத்தை என்னென்பேன்! இன்று என்னினும் இன்பம் அடைந்தவர் உண்டோ? நான் தங்களுக்கும் என் வழக்கத் திருப்பணி ஒன்றைச் செய்யத் துணிந்தேன்; தயை கூர்ந்து எனது விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்," என அடியவரை நோக்கிக் கூறினார்.

அடியவர்:—" நாயனாரே! நீர் குறிப்பு அறியும் நிபுணர்போலும்! என் மனத்துள் கொண்ட விருப்பை நன்கு உணர்ந்தீர். நல்லது நீர் குறிக்கும் திருப்பணி யாது?"

நாயனார் :—"சுவாமி! இச்சிறியேனுக்குத் தெரிந்தது ஒன்றே. அப்பணியும் மிகச் சிறுபணியே; தேவரீர் அணிந்துள்ள ஆடை மிகவும்

மாசு படிந்திருக்கிறது. அம்மாசை நீக்கித் தங்கள் ஆடையைப் புனிதமாக்கித் தருகின்றேன்; தடையொன்றுஞ் சொல்லாமல் தாங்கள் கொடுத்தருள வேண்டும். தேவரீர் மனத்தில் கொண்ட விருப்பு யாதோ நான் அறியேன். நான் குறிப்பு ஒரு சிறிதும் அறியாத ஏழை."

அடியவர்:—"பெரியவரே! குறிப்பு முற்றிலும் உணர்ந்த தொண்டர் நீரே. செல்வமும், அழகும் ஒருங்கே அமைந்த தொண்டரும் நீரே. ஆதலால், உம்மைத் திருக்குறிப்புத் தொண்டர் என்று சொல்வது மிகப் பொருந்தும். நான் கொண்ட கருத்தும் அதுவே. என்னால் தற்சமயம் குளத்திற்குச் சென்று ஆடையை ஒலிக்கப் போதிய சக்தியில்லை இருப்பினும் இந்த ஆடையை விடவும் எனக்குச் சிறிதும் மனமில்லை. ஏனெனில், இதைவிட்டுக் குளிரால் வருந்த எனக்குப் பலமுமில்லை. நான் ஏழையிலும் ஏழை. தேகவன்மை மிகவும் குறைந்தவன்."

நாயனார்:—"புண்ணியரே! தாங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். இச்சிறியேன் உயிர் உள்ளவரை தங்களைப் போன்ற பெரியவருக்கு ஒரு குறையும் வரப்பாரேனா. தாங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம்; கொஞ்சமும் ஐயப்பட வேண்டாம். தேவரீருடைய ஆடையைச் சுத்தம் செய்து கண்ணாடிபோல் கொண்டுவந்து தருகிறேன். தங்கள் ஆடையைத் தயவுசெய்து அளியுங்கள்."

அடியவர்:—"பெருந் தொண்டரே! உமது பேரன்பையும், பெரும் வைராக்கியத்தையும் நான் மெச்சுகின்றேன். ஆனால், எனக்கு மிகவும் பயமாயிருக்கின்றது. ஏனென்றால், இவ்வாடை ஒழிந்தால் எனக்கு வேறு ஆடை கிடையாது. உலகில் என்னைப் போன்ற பெரும் ஏழைக்குப் புண்ணியம் புரிபவரும் மிகச் சிலரே. இக்காலத்தில் உம்மையும் எம்மையும் மதிப்பவர் யார்? நம்மைப் போன்றவர்க்கு ஒருவரும் சிறிதும் நன்மை புரியார். ஆதலால், உண்மையில் எனக்கு எனது ஆடையை விட்டுப் பிரியப் பெரிதும் அச்சமாயிருக்கிறது. நீர் நீர யோசித்து விடை யளிக்க வேண்டும்."

நாயனார்:—"தங்களுக்குச் சிறிதும் அச்சம் வேண்டாம். நான் தாழ்ந்த குலத்தில் பிறந்தவன் என்று தங்களுக்கு அதைரியம் வேண்டாம். கல்வியில்லாதவன் என்று தாங்கள் நினைக்கவேண்டாம். இச் சிறியேன் ஏழையினும் ஏழையேயாயினும், கல்வியில்லாப் பேதையே ஆயினும் சொன்ன சொல்லைத் தவறமாட்டேன். தங்களைப் போன்ற புண்ணியர்முன் நான் ஒரு பொய்யும் சொல்லமாட்டேன். சுவாமிகளே! என்னை நான் புகழவில்லை. ஏழையை நம்பித் தாங்கள் ஆடையை அளிப்பதற்கு நான் அவ்வாறு சொல்ல வேண்டியதாயிற்று, மன்னிக்க வேண்டும்.

அடியவர்:—"நாயனாரே! உமது களங்கமற்ற

முகமும், கருணை பொலிந்த விழியும், உமது குணத்தின் அழகை நன்கு விளக்குகின்றன. உமது கனியினும் சுவைத்த சொல்லோ எனக்குக் கட்டிப் பாகினும் இனிக்கின்றது. உம்மை முற்றிலும் நம்ப எனக்குத் தடையில்லை. ஆனாலும், பயமாயிருக்கிறது. நான் முன்னர்ச் சொன்னபடி மகா ஏழை. ஆடை இல்லையானால், குளிரால் சாவேன். என் தேகத்திற்குத் துன்பம் வருமானால், உமக்குப் பழி வரும். வீணாக நீர் பழி பூண்பது நல்லதன்று. இன்னும் சால யோசியும்.!"

நாயனார்:—"இஃதென்ன! சுவாமிகாள்! தாங்கள் சொல்லுவது எனக்குப் புலனாகவில்லை. என்னால் கூடாத காரியமாயிருந்தால், நான் ஏன் தங்களை வற்புறுத்துகிறேன். அன்றியும், நான் செய்யும் பணியால் என்ன இடையூறு வரும்? இச்சிறு பணிக்குக் கூடவா என்னைச் சக்தியற்றவனாகக் கடவுள் எண்ணுவார்! தங்கள் துணியையே நான் துணையாகப் பற்றிவிட்டேன்; அதை விட எனக்குச் சிறிதும் பிரியமில்லை. இவ்வளவு தாங்கள் அஞ்சுவதற்குக் காரணமேயில்லை. தேவரீர் அவ்வளவு சொன்னதும் எனக்கு மிகவும் நன்மையே. ஏனெனில், நான் வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாத்துத் தங்கள் ஆடையைக் கொண்டு வந்து தருவேன்."

அடியவர்:— "புண்ணியரே! நீர் உலகம் அறியாதவர்; கறுத்ததெல்லாம் நீரென்றும்,

வெளுத்ததெல்லாம் பாலென்றும் நினைக்கும் இயல்புடையவர். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ யார் அறிவார்? கடவுள் உள்ளத்தை யார் உணர்வார்? நான் எப்படியும் உம்மை நம்புகின்றேன். ஆனால் ஏதேனும் இடையூறு வருமானால் என்னால் குளிர் பொறுக்க முடியாதென்று இன்னும் சொல்லுகின்றேன். நீர் நன்கு யோசித்துச் சொல்லும்."

நாயனார்:—"சுவாமி! என்னை இன்னும் சந்தேக நிலையில் வைக்கவேண்டாம். இச்சிறியவன் சொன்ன சொல்லை உயிரினுஞ் சிறப்பாக நினைப்பவன். அதிகம் சொல்ல எனக்குச சக்தியில்லை; அன்பு கூர்ந்து ஆடையை அளித்திடுமாறு வேண்டுகின்றேன்."

அடியவருக்கு இன்னும் பேச்சை வளர்த்தப் பிரியமில்லை; அவர் நாயனார் சொல்லை முற்றிலும் நம்பித் தமது ஆடையை அவர்வசம் ஒப்புவித்தார்; ஆனால், அவர் அன்று மாலை சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்னமே தமது ஆடையைக் கொண்டு வந்து கொடுக்கும்படி நாயனாருக்குச் சொன்னார். நாயனார் அவ்வாறே ஒப்புக்கொண்டு அடியவரிடம் விடைபெற்று, ஆனந்தபரவசராய் ஆடையை வாங்கிக்கொண்டு விரைந்து சென்றார்.

## III

அடியவர் பெயர்ந்து நீங்கியதும், திருக்குறிப்புத்தொண்டர் மிக்க அன்போடு தாம் கொண்ட திருப்பணியை நிறைவேற்ற முனைந்தார். ஆனால், அந்தோ! பாவம்! என்ன மாயம்! என்ன ஜாலம்! எவரும் எதிர்பாரா வண்ணம், வெள்ளொளி செவ்வனே பரப்பிய கதிரவன் கணத்தில் மறைந்தான்; பட்டப்பகல் துண்ணென மறைந்தது. திடீரென எங்கும் காரிருள் கவிந்தது; மேகக்கூட்டங்கள் நாலாப்பக்கங்களிலும் ஓடிக் கலந்தன. மக்கள் மதிமயங்கி, மழைக்கஞ்சி மனைக்கு ஓடினார்; இன்னிசை மிழற்றித் தனி இன்பூட்டும் பறவைக் குழாங்கள் கூண்டுகளிற் பதுங்கி மறைந்தன, ஏழை எளியவரும் அன்று கூலி போயிற்றே என்று ஏங்கித் தம் தொழிலை விட்டுச் சிறுமனை நண்ணினர்; பள்ளிப் பிள்ளைகள் விடுமுறை கிடைத்ததென மிகக் களிப்புடன் ஆரவாரஞ் செய்துகொண்டு இல்லத்திற்கு ஏகினர். பசுக் குழாங்கள் தத்தளித்து ஏங்கி வீட்டின் பக்கங்களில் பதுங்கிக் கொண்டன. மாதர்கள், தெருவில் விளையாடிக்கொண்டிருந்த தங்கள் குழந்தைகளை ஓடிவந்து முத்தம் தந்து மனைக்கு எடுத்து ஏகினர். கடைக்காரர்கள் அன்று வியாபாரம் போயிற்றே என மனம் புழுங்கிக் கடைகளில் கைகட்டி அமர்ந்து மௌனம் பூண்டனர்.

எருமை ஏறுகள் மாத்திரம் இன்ப மிகுதியால் இறைந்துகொண்டு துள்ளி ஓடின.

அந்தோ! பாவம்! அவ்வளவு விரைவில் அத்தகைய மாறுபாடுகள் தோன்றிவிட்டன. அநேக மக்கள் அன்று பேரிடி இடித்துப் பெரு மழை பொழியும் எனப் பயந்து சொல்லிக்கொண் டனர். ஒருவருக்கும் அன்று மழை பொழிவது விருப்பமில்லை. ஏனெனில், அவர்கள் முன்னமே குளிரால் மெலிந்து, வருந்திக்கொண்டிருந்தனர். குளிர் காலத்தின் கொடுமையைச் சொல்லவும் முடியுமோ?

எல்லோரும் எண்ணியபடியே திடீரெனக் கனத்த மழை பொழிய ஆரம்பித்தது. உள்ளம் நடுங்குமாறு இடியேறுகள் இடித்துப் பூமியைத் தவிடுபொடியாக்குவனபோல் அட்டகாசஞ் செய் தன. கண்களைப் பறிக்கும் மின்னொளிகள் பளீர் பளீரெனப் பேரொளி வீசின. மரங்களை வேரோடு கிளப்பித் தள்ளும் பெரும் புயற்காற்று சங்கத்தொனி செய்து நாலாப் பக்கங்களிலும் வீசத் தொடங்கியது. மழைத் தாரைகள் முத் தைப் போன்ற பெருந் துளிகளைச் சரம் சரமாகக் கொட்ட ஆரம்பித்தன. வர வர இன்னும் இடி யும், மின்னலும், காற்றும் மிகுந்து மழை மும் முரமாயிற்று. சொல்லவொண்ணாத குளிரோ மக் கள் தேகத்தில் அம்புபோல் பாய்ந்து பெருந் துன்பு செய்தது. எந்த மக்களும் வெளியில் தலை

காட்டவில்லை. எல்லோர் உள்ளமும் திடுதிடெனநடுங்கியது. "ஐயோ! இதென்ன விபரீத காலமோ!" என எல்லோரும் சொல்லிக் கொண்டனர். "இவ்வாறு மழை இன்று முழுமையும் பெய்யுமாயின், இந்நகர் வெள்ளத்தால் முழுகிப் போகும்" என்று அநேகர் அச்சத்தினால் சொல்லிக்கொண்டனர். ஐயோ! இருளின் கொடுமையை இத்தன்மைத் தென்று ஒருவராலும் சொல்ல வியலாது. பக்கத்திலுள்ள மனிதரும், பொருளும் ஒருவருக்கும் தெரியவில்லை. அதுகாறும் அந்நகரில் அத்தகைய கொடுமையான மழை பெய்ததே யில்லை; அத்தகைய காரிருள் மக்கள் கண்களைக் குருடாக்கியதே யில்லை.

நிற்க, அந்தோ! நம் நாயனார் நிலைமை என்னே எனக் கவனிப்போம்: அப்பெருங் குணவள்ளல் எவ்வளவு விரைவில் வந்த அடியவர் ஆடையை ஒலித்துக் கொடுக்க எண்ணினாரோ, அவ்வளவும் மழையினால் காலதாமதம் அதிகமாயிற்று. அவர் கொண்ட விருப்பம் சிறிதும் நிறைவேறாதுபோல் தோன்றிற்று. தாம் எடுத்துக்கொண்ட காரியம் மிகச் சிறிதே யெனினும் அது மிகப் பெரிய மலையாய் விட்டது. நாயனார் தமது தேகம் பதை பதைத்து, இங்கும் அங்கும் பித்தர்போல் ஓடினார். ஆனால், பாழும் மழைக்கோ சிறிதும் மனம் பதைக்கவில்லை. அவர் "ஈதென்ன விபரீதம்! ஐயோ! என் சொல்

தவறிப்போகுமே! ஏழை என் செய்வேன்! கொடுமையான இம்மழைக்குச் சிறிதும் கருணையில்லையே" எனக் கூறி மனம் தத்தளித்துக் கொண்டிருந்தனர். அவர் எவ்வளவுக்கு எவ்வளவு மனக் கவலையுற்றனரோ, அவ்வளவுக்கு அவ்வளவு மழை மும்முரமாய்ப் பெய்ய ஆரம்பித்தது. பாழும் இடியும் ஓயவில்லை; மின்னலும் மறையவில்லை. காற்று முன்னினும் அதிகமாய் அடிக்க ஆரம்பித்தது. இருளோ உலகையும் அந்தகாரத்தில் அமிழ்த்துவதுபோல எழுந்து, காஞ்சிமாநகரம் இருக்கும் இடம் தெரிய வொட்டாமல் செய்து விட்டது.

அந்தோ! பாவம்! என்ன செய்வார் நாயனார்? அடியவர் ஆடையை எடுத்து உற்றுப்பார்ப்பார். தெருவில் ஓடிவந்து வானத்தைப் பார்ப்பார். "ஐயோ! கெட்டேன், கெட்டேன்," என்று கைகளையும், கால்களையும் உதறிக்கொள்வார். பலமுறையும் உள்ளே நுழைவார். ஆடையை ஒலிக்க அங்கு ஏதேனும் வழியுண்டோ என்ன எண்ணுவார். "ஐயோ! ஒருவழியும் இல்லாமல் மதியிழந்தேனே! என்னினும் பாவி வேறுண்டோ! ஈசன் போல் வந்த அடியவர்க்கு ஐயோ பெரியதோர் இடையூறு செய்தேனே," எனக் கூறி ஒன்றும் தோன்றப் பெறாமல் மனம் நைந்து உருகுவார். அவருக்கு ஓரிடத்தில் நிற்கவும் முடியவில்லை, அமரவும் முடியவில்லை. உன்மத்தர் போலத்

திரிந்து திரிந்து வந்தார். அதுவும் முடியவில்லை. பின்னர் அவரால் ஒன்றும் சொல்லவும் முடியவில்லை, பண்ணவும் முடியவில்லை; அவர் பரிதாப நிலையை எண்ணி எழுதவும் முடியவில்லை; எவரால் ஒன்றும் எண்ணவும் முடியாது.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தும் மழை விடாதிருந்ததைக் கண்ட நாயனார் "இனி என்னால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. நான் மதியிழந்தேன், வாய்ச் சொல் இழந்தேன்; பொருள் இழந்தேன்; புண்ணியம் எல்லாம் இழந்தேன்; அடியவர் திருமுகத்தை எவ்வாறு காண்பேன்? அவர் திருமுன்னர் எவ்வாறு நிற்பேன்? மனம் புண்ணடைந்தது. போதும் போதும் இன்னும் பொறுக்க என்னால் ஆகாது; ஐயோ! அடியவர் எவ்வாறு குளிரால் நலிவாரோ? அவர் என் பிழையை எங்ஙனம் சகிப்பரோ? எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே, நான் என் செய்வேன்? என் செய்வேன்," என்றுகூறி நெடுநேரம் துன்பக் கடலில் அழுந்தினார்.

பின்னர், புண்ணியப் பெருந்தகை, மதிவளர் சடையவன் நம் சிவபெருமான் திருவடியைச் சிந்தித்து மனம் ஒருவாறு தேறிச் சிறிது அமைதியுற்றார் எனினும், அவருக்குத் தகுந்த ஒரு யோசனை பிறந்தது; அந்த எண்ணத்தின்படியே செய்தால், தாம் ஒரு சிவனடியார்க்கு இழைத்த பிழைக்கு ஏதோ ஒரு சிறிய தண்டனையாக இருக்

கும் என்று நாயனார் மனத்திடங் கொண்டார்.

வள்ளலார் மழையென்றும் பாராமல், இடி யென்றும் அஞ்சாமல், இருளென்றும் மருளாமல், கொடுங்காற்றென்றும் நடுங்காமல்,ஒரு சுத்தவீரன் பகைவர்களை அழிக்க செல்வதுபோலத், தம் இடத்துள்ள ஆணவம்,கன்மம்,மாயை என்னும் மூன்று பகைவர்களையும் அழிக்கப் புறப்பட்ட னர். அவருக்கு உயிர் துரும்பாகத் தோன்றிற்று. ஆதலால், அவர் எதற்கும் அஞ்சாமல், இடை யிடையே தோன்றும் மின்னல் வெளிச்சத்தைக் கொண்டு தாம் குறித்த இடத்திற்குப் போகும் வழியைக் கண்டுபிடித்து அதில் சென்றுகொண் டிருந்தனர். அவரை மழையும் தாக்கவில்லை, காற்றும் தடுக்கவில்லை, குளிரும் உறுத்தவில்லை. அவர் புண்ணிய சொரூபியானதால், எப்போதும் சிவானந்தத் தேனைப் பருகிக்கொண் டிருந்தனர். சிவனடியைப் பற்றிப் பிடித்தவர்க்குத் துன்ப மும் உண்டோ?

நாயனார் எங்குச் சென்றாரென எண்ணுகின் றீர்கள்? அவர் தாம் வழக்கமாய் ஆடை ஒலிக் கும் நீர்த் துறைக்கு விரைந்து சென்றார். அவ ருக்கு நெடுநேரமாகச் சிவனடியார்க்கு இழைத்த பழியைத் தாங்க முடியவில்லை. அவர் சிறிதும் மனங்கூசாமல், பயங்கரமான ஒரு தீர்மானத் திற்கு வந்திருந்தனர். அவரது பத்தி வைராக் கியமும், சொல் வைராக்கியமும் தமது இன்னு

யிரைத் துரும்பாக மதிக்கச்செய்தன. அந்தோ! பாவம்! நம் புண்ணியப் பெருந்தகையார் நீர்த்துறைக்கு வந்து விட்டார்; தாம் கொண்ட விருப்பை நிறைவேற்றத் துணிந்துவிட்டார்.

நாயனார் ஈசன் திருவருளை முற்றிலும் மனத்தில் சிந்தித்துப் பின்னர் நெடுநேரம் தாம் இழைத்த பழியை எண்ணி வருந்தினர். அவர் தாம் எவ்வளவு எண்ணினாலும், தமக்குத் தகுந்த தண்டனையைத் தேடினாலும், அடியவர்க்கு வருந் துன்பம் எவ்வாறு நீங்கும் என எண்ணி எண்ணி மனம் புழுங்கினர். "எல்லாம் ஈசன் செயலே; எம்பெருமானே அடியவர் துயரைக் களைதல் வேண்டும்; எம் இறைவனே அடியார்க்குக் கருணைகாட்டுதல் வேண்டும்," என நாயனார் முடிவில் அமுத மொழிகள் கூறி நீர்த்துறையிலுள்ள ஒரு பெரிய கருங்கல்லின் அருகே சென்றார்.

அங்குச் சென்றதும், ஆனந்த பரவசராய் நாயனார் கருங்கல்லை உற்று நோக்கிச் சரியாகக் குறி பார்த்தார். அந்தோ! என்னென்று சொல்வது! எழுதக் கைநடுங்குகிறது; எண்ண உள்ளம் பதைக்கிறது. பெரியவர் என்றால் அவரல்லவோ பெரியவர்; புண்ணியர் என்றால் அவரல்லவோ புண்ணியர்; சத்தியவந்தரென்றால் அவரல்லவோ சத்தியவந்தர்? சற்குணரென்றால் அவரல்லவோ சற்குணர்? நம் தருமமூர்த்தியாகிய

நாயனார் சிறிதும் தளராமல், ஈசன் திருவடியையே துணையாகப் பற்றி, மேற்கூறிய பெரிய கருங்கல்லில் தமது அழகிய சிரசைக் கொண்டு போய் வலிவாக மோதினார்.

நாயனாரது புண்ணிய சிரம் கல்லில் பட்ட மாத்திரத்தே அருட்பெருஞ் சோதியாகிய சிவபெருமானது செந்தாமரைத் திருக்கரமானது அதனைத் திடுக்கெனத் தோன்றிப் பிடித்துக்கொண்டது. உடனே வானின்று விழும் நீர்மழைபோல், மலர் மழை பெய்தது. தேவர்கள் எல்லோரும், நாயனார் பெருமையைப் புகழ்ந்து சொன்மாரி பொழிந்தனர். காரிருள் நீங்கிக் கவினொளி நிறைந்தது. கண்ணுடை வள்ளலார் விண்ணிடை நின்றார்; அன்புடை அம்மையும் அவருடன் திகழ்ந்தார்.

நாயனார் அவ்வரும் பெருங் காட்சியைக் கண்டு, அன்பு பெருகி வழிய, உரோமம் சிலிர்ப்ப, உடலிளக, மனது அழலின் மெழுகாய் உருக, விழி நீர் பெருக, "என் அப்பனே! அம்மையே! உனது பொன்னடி காண இவ்வளவு காலமாயிற்று. உனது திருக் காட்சியினும் இனிய பொருள் உண்டோ? ஏழையையும் பொருட்படுத்திப் பெருங் கருணை வெள்ளம் பொழிந்த உன் பேரன்பிற்கு என்ன கைம்மாறு புழுத்தலைப்புலையனேன் செய்ய வல்லேன்? என் ஈசனே! ஒப்பிலா மணியே! நான் பிழைத்தேன், பிழைத்தேன். உன்

திருக்கோலத்தைப் பார்க்கப் பார்க்கப் பரமானந்தம் விளைகிறது. உன் செந்தாமரை அடியைக் காணக்காண உள்ளம் இனிக்கிறது. வள்ளால்! உன்னைப் பேசப் பேச வாய் மணக்கின்றது. வஞ்ச வினையோ எனை விட்டோடித் தலை வணங்குகின்றது. உன்னைப்போல உறவு எனக்கு ஒருவரும் இலர்,'' எனக் கூறி ஆனந்தக் கூத்தாடிச் சிவபெருமான் திருவடிகளை வழுத்தி நின்றார்.

முக்கண்மூர்த்தி புன்னகை பூத்து, நாயனாரை நோக்கி, "ஓ! அன்பனே! உன்னினும் உயர்ந்த மனிதன் உலகில் இல்லை: நீயே உத்தமன்; நீயே புண்ணியன், நீயே தீரன், நீயே வீரன். நான் யாரென்று உனக்கு இப்போது தெரியவருகிறதா? நான்தான் ஏழைச் சிவனடியாராக அழுக்கு நிறைந்த ஆடையைத் தரித்துக்கொண்டு உன் மனைக்கு வந்தேன்; நான்தான் திக்கென மழையையும், மின்னலையும், காற்றையும், மாயமாய் உண்டுபண்ணினேன்; நான்தான் பகற்பொழுதை மாலைப் பொழுதாக மாற்றினேன். இவையெல்லாம் நான் உன் அன்பின் மாட்சியை உலகத்தார்க்கு அறிவிக்கவே செய்தேன். உன் உயர்வை நான் சோதித்து அறியவேண்டியதில்லை. ஆனால், நான் அவ்வாறு செய்தது உலகில் பல நல்லறிவாளிகளுக்குப்பேரன்பை விளைவிக்கும்; அதனால், அவர்கள் உய்வார்கள் ஆனாலும், நான் உனக்குப் பெருந் துன்பை விளைவித்தேன். இருப்பி

னும் கவலையுறுதே. நீயே என் அருமைக் குழந்தை, நீயே என் உண்மை அன்பன். உன் உலவாப் பெருமையை மூவுலகிற்கும் நான் அறிவித்தேன். இனி நீ இங்கு இருத்தல் தக்கதன்று; இப்போதே எம்முடன் என்றும் அழியாத பேரின்ப வாழ்வை அளிக்கும் திருக்கைலாயத்திற்கு வந்து சதா இன்பத்தையே அனுபவித்துக்கொண்டிருக்கக் கடவாய்” எனக் கூறி நாயனாருக்குத் திருக்கோலம் காட்டிப் பின்னர்ப் பேரின்ப வாழ்வைத் தந்தருளினார்

“ஒருவனே போற்றி யொப்பி லப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி யெங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் றனிமை தீர்த்தே.”

(மணிவாசகப் பெருமான்)



Printed at the Guardian Press 158 B Broadway Madras.

14186

# கும்பகோண

# ஸ்ரீ ஸ்தலபுராண ஸாரம்



சென்னை

[illegible] குமாரர் அவர்களால்

வெளியிடப்பட்டது.

 1933 [விலை அணா-8.

சிவமயம்

# கும்பகோண

# ஸ்தலபுராணவசனம்



இஃது

**மகாவித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை**

*அவர்களாலியற்றிய புராணகாவியத்தை*

*அநேகவித்துவான்களும், இஸ்கூலினிஸ்பெக்டர்*

மகா-ா-ா-ஸ்ரீ சாமிநாதமுதலியாரவர்களும் ஏற்படுத்திய

வசனநடையைக்கொண்டு

*மேஷியூர் ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரஸ்வாமிகோயில்*

*தருமகருத்தர்*

**மகா-ா-ா-ஸ்ரீ கோ. குழந்தைவேலு செட்டியார்**

*அவர்கள் நன்முயற்சியினால்*

*சென்னை முத்தமிழ்க்கவிசிங்கம்*

மகா-ா-ா-ஸ்ரீ M. S. துரைசாமி பிள்ளையவர்களாற்

*பரிசோதிக்கப்பட்டு,*


*சென்னை*

**ஸ்ரீ ஜெயகுமாரி அண்டு கம்பெனி**

*புரொப்பரையிட்டர்*

**C. இராகவ முதலியார் அவர்களால்**

*சென்னை சக்கரவர்த்தி அச்சுக்கூடத்திற்*

*பதிப்பிக்கப்பட்டது*


 1933 (விலை அணா-8.

குடம்பகோண ஸ்தலபுராண வசனம்

# விஷய சூசிகை.



## 1. சிவஸ்தலம்.

அமுதகடசம்பந்தத்தாலாயின ஆறு:—

1. கும்பேசம்.
2. சிக்கேசம்.
3. வில்வவனேசம். (நாகேசம்.)
4. நாளிகேரேசம். (அபிமுகேசம்.)
5. யக்ஞோபவீதேசம். (கௌதமேசம்.)
6. பாணபுரேசம்.

அன்பர் பொருட்டாயின நான்கு:—

1. வின்வேசம்.
2. மடந்தைபாகேசம்.
3. மாலதிவனேசம்.
4. கைலாயநாதம்.

## 2. விஷ்ணுதலம் நான்கு.

1. ஆராவமுதன்றளி. (சாரங்கபாணிகோயில்)
2. சுதர்சனன்றளி. (சக்கரபாணிகோயில்)
3. வராகப்பெருமான்றளி.
4. வரதராஜன்றளி.

ஈண்டுத் தலங்கள் போலவே தீர்த்தங்களும் பதினான்கு; இவற்றுள்
இயற்கையின் ஆயின ஏழு செயற்கையின் ஆயின ஏழு,

## தீர்த்தங்கள்.

இயற்கையின் ஆயின ஏழில்.

| | | |
|---|---|---|
| 1. | பொற்றாமரை. | தடாகங்கள். |
| 2. | மகாமகதீர்த்தம். | |
| 3. | வருணதீர்த்தம். | |
| 4. | காசிபதீர்த்தம். | காவிரி நதித்துறைகள். |
| 5. | சக்கரதீர்த்தம். | |
| 6. | மதங்கதீர்த்தம். | |
| 7. | பகவதீர்த்தம். | |

செயற்கையின் ஆயின ஏழில்:—

| | | |
|---|---|---|
| 1. | அஸ்வத்தீர்த்தம், (நாக தீர்த்தம்,) | கூபம், |
| 2. | மங்களகூபம், | |
| 3. | குரதீர்த்தம், | |
| 4. | சந்திரதீர்த்தம், | தடாகங்கள், |
| 5. | சூரியதீர்த்தம், | |
| 6. | கௌதமதீர்த்தம், | |
| 7. | கவராதீர்த்தம், | |

# முகவுரை.



என்னாட்டினுஞ் சிறந்த, நன்னாடதனிற், றென்னாடே மிக்கவுயர் கொண்டது. அதனினும், "கும்பகோணம்" அதிமேன்மையுடையதாம். ஏனெனில்:— "மூர்த்தி தலந் தீர்த்தம்" இம்மூன்றும், முறையே வுள்ளது. அஃதெவ்வா றெனில்:— கையிலங்கிரிக்கிறைவரே, கும்பத்துட் புகுந்து "மங்களாம்பிகையை" பாகததமர்த்தி, இனிது விளங்கி, திருக்கோயிற்கொண்டு, மலர்மேன் மங்கை மணாளனும், அலர்மேயவனும், மற்றுமனந்த மகரிஷிகளும் பூசிக்க வருள் பாலித்தோங்குவதினால் மூர்த்தி விசேடமும், நங்கருணைக் கடலாகிய, வம்பிகைப்பாகரே தன்றிருக்கரத்தாற் சிருட்டித் தும், தன திருப்பிடமாகக் கொண்டதும், மூவராலும், தேவா ரம் பாடப்பெற்றதும், பஞ்சகுரோசஸ்தலம் தம்மைச்சூழப் பெற்றிருத்தலாலும், வடபால், காவிரியும் தென்பால், அரி சொன் நதியையும், தமக்கு மாலையாகக் கொண்டதாதலின், தலவிசேடமாயது; "சரயு, கங்கை, யமுனை, சரஸ்வதி, நர் மதா, சிந்து, கோதாவிரி, கிருஷ்ணை, காவிரி" இவ்வொன் பது, கங்கைகளிடத்தும், அநேகமாயிரம் மகரிஷிகளென்ன, முனிவர்களென்ன, சித்தர்களென்ன, மற்றேனை மானிடத் திரள்கள், எண்ணிலராடித், தத்தம், பவத்தை நீத்துய்ந் தனர். அப்பவமுற்றும், மேற்கூறிய ஒன்பதின் மர்கட் குற்று தம்பவத்தைப் போக்கக்கூடியவித மறியாது மயங்க, நம்மீசனிடஞ்சென்று முறைப்படி வினவ, இடபா ரூட ராகிய, வெள்ளியங்கிரிவாசர், நீவிர் ஒன்பதின்மரும் தென் னாட்டிலினிது விளங்காநின்ற "கும்பகோணஞ்" சென்று நம்மாலாதி கெர்ப்பத்திலுண்டாக்கப்பட்ட மாமக தீர்த்தத் தில் கும்பராவியிற் குருவுற்ற தினத்திலாடிட, தம்பவம் நீங்கி யுய்வீர்களென விளம்பிய வண்ணமே, அவ்வொன்பதின்

மரும், மகதீர்த்தத்திலாடி வேண்டும் வரம் பெற்றுய்ந்தனர். அன்றியும், ஏமரிஷி முதலாகிய, இந்திராதி தேவர்களுமாடி வேண்டும் வரம் பெற்றனரெனில், இங்கு இம்மகதீர்த்த விசேடத்தை, ஆயிரம் பணாமுடியையும், இரண்டாயிரம் நாவையுமுடைய ஆதிசேடனுஞ்செப்ப நாணுவானெனில்:— எம்போலவார் சொல்லப்புகில், "புலியைக்கண்டு பூனை சூடிக் கொண்டது போலவும்" "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழித் தானுமதுவாகப் பாவித்துத், தானுந்தன், பொல்லாச சிறகை விரித்தாடினாற் போலுமே, கல்லாதான் கற்றக் கவி" என்பதொக்கு மல்லாது வேறுளதோ? ஆகலாலித்தகைய மகிமை கொண்ட வண்மையாய், தீர்த்தவிசேடமாயது. நிற்க; மூர்த்தி, தலம் தீர்த்த விசேடங்களும், ஐந்து, குரோசத்திற்குட்பட்ட, மூர்த்தி, தலம் தீர்த்த விசேடத்தையும், பஞ்சகுரோசஸ்தலத்தின் வரலாறும், ஆங்காங்குள்ள சிறப்பும், அதுக்குற்ற ஊரும், பேரும், இக்கும்பகோண தலபுராண வசனத்தில், முன் மகாவித்துவான், மகா-ள-ள-ஸ்ரீ, மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்களால், காவியமாகத் திரட்டியிருந்ததானது. கற்றவர்க்கன்றி, மற்றவர்க்கு, சுலபமாக விளங்காதாதலின், இன்னும் பலவித்வரத்தினங்கள் செய்திருக்கின்ற, வசன நடையாக வுள்ளதையும், சென்னை முத்தமிழ்க்கவிசிங்கம் மகா-ள-ள-ஸ்ரீ, M. S. துரைசாமி பிள்ளையவர்களைக் கொண்டு முன் பிரதக்கிணங்கவும், அதில் விடப்பட்டிருந்த சில விஷயங்களைச் சேர்த்தும், மிக்க லட்சணமும், தெள்ளிய செந்தமிழ் நடையில, கற்றவரும், மற்றவரும், பெண்டிரும், செவ்வையே, வாசித்துணருமாறும், யாவர்க்கும் பயன்படு மென்றும், இவ்வித வசனரூபமாக, வெழுதி நிகழும், ஆங்கீரஸ வருடம், கும்பராசியில் வரும், மாமகவுஉர்ச்சவத்தில் அநேக தேசத்திலிருந்து மக

நீராட வருகின்ற, சிவநேசச் செல்வர்கட்குதமாறும், இஃதை வாசித்து எளிதில் அறிந்து கொள்வார்களென்பதும், சில சிவநேச செல்வர்கள், விருப்பத்தின் வண்ணம், இந்நூலுக்கு கும்பகோண ஸ்தலபுராண வசனமெனப் பெயரளித்து இங் கச்சியற்றினம். இங்கு பொருள் நலத்தைக் கோருது. புண் ணியத்தைக் கோறியதும், எனது பேறவாக்கொண்டும் எம் புல்லறிவுக் கெட்டியவாறு எழுதினன் போலும், இதில் மகாமக வைபவச்சிறப்பு முதலிய புத்தகங்கட்கும், மற்ற தார்க்கும் சிற்சில பேதா பேதங்கள் தோன்றும். அதற்குக் காரணமாகப் பட்டது தொந்நூலாகிய வழிநூலேயாம். இதற்கு காரணம் வசன ரூபமாக வெழுதியச்சியற்றினவர் கள் காரணரல்லர் போன்றும்; பலர்க்கும் பயன் படுமாறும், புண்ணியத்தையுங் கருதி செய்யப்பட்டதே யாம், இதில், பிழையிருப்பினும் அறிஞோர்களஃதை பாராட்டாது,பாலிற் கலந்த நீரைப் பிரித்துணணும் ஒதிமம் போல, குற்றத்தை நீத்து, குணத்தைக் கொண்டுய்குவர்களறிஞர்கள் கொள்கை யென்பதே இஃது வரைந்தோரது துணிபு.

———

உ

கடவுள் துணை.

இஃது,

# சென்னை, முத்தமிழ்க்கவிசிங்கம் மகா-ா-ா-ஸ்ரீ,

# M. S. துரைசாமி பிள்ளையவர்களாலியற்றிய

# சாற்றுக்கவி.



சிலைகுனித்தெயில் கண்முற்றுஞ்
செற்றவன்றிருத்தாள்பேணும்
மலைமுனி குருகத்தெய்வ வாணி
மெய்த் தவளங்கொள்ள
வலையினுட் சிக்கி நீங்கி
மாற்றமொன்றிலராய்வாடி
யலைபவர்க்கமுதமாக வல்லல்
நோயழிக்கவின்னும்.

மோதுவெண்டிரை நீர்மேய்ந்து
மெய்தடிந்தருள்சுரந்து
பேதுறுதுலகமுற்றும் பெய்திடுங்
கொண்மூவென்ன

தாதுகுமலர் மென்கூந்தற்
றையலரூடி நீத்த
கோதறுமணிகண் மின்னுங்
குறைவறு குடந்தைவாழ்வோன்.

எல்லையிற்கலைகள் போற்று
மெம்பிரான்றிருச்செவிக்கும்
நல்லியற்கவிஞர்கொள்ளு
நன்பனும் பொன்னுசாமி
புல்லகண்டம் போற்குடந்தை
புராணத்தை வசனமாகச்
சொல்லியங்கச்சியற்றி ? சொத்துவம்
விடுத்தான் மன்னே.

---

ᛉ. சருக்கரை.

? உரிமையுடன்.

எஞ்சி நிற்பவன் என்பதற்கு சர்வசங்காரப் பெயரும் சாக்ஷியாம்.

(எஞ்சி நிற்பவன் எனவே முதலாயினன்; அவன் என்பதும் பெற்றும்)

புருடசூத்தம் என்னும் மந்திரத்தில் ஆதியினும் அந்தத்தினும் ஈசானப்பெயர் வருதலால் இடையிலுள்ள நாமங்களனைத்தும் இவனையே குறிக்குமென்று மீமாம்சை சொல்லுகிறது, (மீதலம் முடி, பாதலம்அடி, பூதலம் அரை, திசையெட்டும் புயம், சோமசூரியாக்கினி கண்கள், சொல்லெலாம் சுருதி என்று இவ்வாறு வேதக் கருத்துக்களை வெளியிட்டுத் தோத்தரித்த பிரமதேவர் வேண்டிய வரம், யாவரும் அறியவேண்டிய வரங்களே.) அவையடியில் வருவனவாம்.

உம்மை யொருகால் தரிசித்தவர் காமியார்த்தங்களையும், பலகாலும் தரிசிப்பவர் காமியார்த்தததுடன் மோக்ஷார்த்தத்தையும் அடையவேண்டும்,

கார்த்திகைச்சோமவாரத்தில் உன்சந்நிதியில் ஓர் நெய்விளக்கேற்றுவோர்க்கு உமது திருவடிநீழல் சித்திக்க வேண்டும்.

உமது கோயிற்றிருப்பணி செய்வோர் வேண்டியவை வேண்டியவாறே பெறவேண்டும்.

மாசிமகத்தில் பணிவோரைப் பிரமஹத்தி சுற்றிக்கொண்டிருந்தாலும் நீங்கவேண்டும்.

மாசிவிழாவை நான் விடாது பண்ணி வரவேண்டும்.

மாசிவிழாச் சேவிப்போர் மாயனைப்போல் வாழவேண்டும்.

இந்த விழாவிற்கும் மற்ற விழாவிற்கும், இயன்றது கொடுத்துதவுவோர் உமது சாயுச்சியத்தைப் பெறவேண்டும்.

மாசிப்பூரணையில் தூயதீர்த்தமெல்லாம் மாமக தீர்த்தத்தில் சேரவேண்டும்.

அன்று அத்தீர்த்தமாடியவர் மாயாமலரகிதராக வேண்டும்.

மாகஸ்நாட ஆசையோடு புறப்பட்டவர் வந்து மூழ்காமல் மத்தியில் இறக்கும்படி நேரிட்டாலும் அஸ்வமேத யாகபலனை யடையவேண்டும்.

துவஜாரோகண முதல் தீர்த்தவாரி வரையில், விடாது தரிசிப்பவர் மிகக்கொடியராயினும் நீர் அவர்க்கெளியராயிருக்கவேண்டும்.

பன்னிரண்டு வருடத்துக்கொருமுறை சிங்கத்திற் குரு வரும் மாசிமாதவிழாவை நானே நடத்திவரும்படி செய்ய வேண்டும்.

வருஷவிழா மாதவிழா நடத்துவோர் எப்போகமும் துய்த்தலவேண்டும், அவர்கள் எவ்விடத்திருந்து நினைத்தாலும் அவ்விடம்போய் காரியம் கைகூடச செய்யவேண்டும் என இன்னன பலவரம் பெற்று மகிழ்ந்தார் பிரமதேவர்.

இவ்வாறு உடைந்த குடமூக்கின்வழியாக அமுதம் நாற்புறமும் பரவியதாற் கும்பகோணமெனறும், உடைந்த மூக்கின்மேல் பரமசிவன் மண்ணைப்பிடித்து இலிங்கமாக வைத்துப் பூசித்தலாற் கும்பகோணம்என்றும், (கோணம் மூக்கு) பெயருண்டாய் அது தமிழில் மரூஉசசொல்லாய்க் குடந்தை என்று வழங்கலாயிற்று படைப்புக் காலத்திலேயே தான் முதலில் தன்கையாலே உண்டான காரணத்தால் ஆதிகும்பேசர் எனவும் அமுதம் நிறைந்த இடத்தில் உண்டானதால் அமுதலிங்கேசர் எனவும், இன்னும் பல காரணங்களால் பலவிதமாயும் பெயருண்டாயின. இது அடியில்வரும் சுலோகங்களாலறிக.

1. (சுலோகம்) கும்பஸ்ய கோணதோயஸ்மாத் ஸுதா பூரமயம் பரம் தஸ்மாத்துததபீதம்லோகே கும்பகோணம் வதந்திஹி, கும்பப்ரதாந ரூபத்வாத் கும்பகோணம் விதுர் புதா: கோணபேதநஸம்ஸ்தானே யஸ்மாத்ஸம் ஸ்தாபிதம் சிவம் கும்பகோணேசுவரம் நாம்நாவதந்திமுநயோதிஷி.

இத்தலத்திற்கு பாஸ்கர க்ஷேத்திரமென்றும் பெயருண்டு பாஸ்கரக்ஷேத்திரமென்றால், மலையையாவது அல்லது நதியையாவது அடுத்துள்ள தலத்தில பிரமவிஷ்ணு ருத்திராதி மும்மூர்த்திகளும் இருந்து சூரியனால் அம்மூர்த்திகள் பூசிக்கப்பட்டால் அது பாஸ்கர க்ஷேத்திரமென்று பெயர். சுலோகம்

11. பர்வதாக்கிராத் நதீகூலாத் பிரமவிஷ்ணு சிவாந்விதாத் தூர்க்காதிருகமுக்கியாச்ச பாஸ்கரேணப்பிரபூஜநாத் பாஸ்கரக்ஷேத்திரமித்யாஹு: விருஜிநௌகவிநாசநம்.

கும்பகோணமிருக்குமிடமும் எல்லைகளும், இத்தலம் இருக்குமிடத்தைச் செவ்வையாய்ச சொல்லுமிடத்துக் கீழ்கடலாகிய வங்காளவிரிகுடாவுக்கு மேல்பக்கத்தில் ஐந்து யோசனைதூரத்திலும், விபீஷணர்க்கருள எம்பிரான் பள்ளிகொள்ளும் காவிரிநதியை மாலையாகக்கொண்ட அரங்கத்திற்கும், நாகேந்திரவனமென்ற திருவானைக்காவிற்கும் கீழ்பால் நான்குயோசனை தூரத்திலும், திருஆதவூரடிகட் கருளிய இடமாகிய திருப்பெருந்துறையென்னும் ஆவடையார் கோவிலுக்கு வடபால் ஏழுயோசனை தூரத்திலும், மணிமுத்தாநதிக்கரையில் விளங்கும் விருத்தாசலத்துக்குத் தென்பால் ஐந்துயோஜனை தூரத்திலுமுள்ளது. இது பூமகளின் மார்பணியாகிய மதாணியின் நடுநாயகமாகிய இரத்தினம் போன்றது. இதைச்சூழ்ந்து அநேக ஸ்தலங்க ளிருக்கின்றன. அவைகளுள் கிழக்கில் திருவாவடுதுறை, தென்குரங்

காடுதுறை, முதலிய சிலஸ்தலங்களும், தென்கிழக்கில் குடவாயில், திருநாரையூர், சிவபுரம், கலயநல்லூர், முதலிய சிவஸ்தலங்களும்; தெற்கில் மதங்கர்க்கருளும் தெங்கணகாஞ்சியும் பட்டீச்சுரம், பழையாறை, திருச்சத்திமுற்றம் முதலிய பலதலங்களும், தென்மேற்கில் நல்லூர், திருப்பாலைத்துறை, சக்கரப்பள்ளி முதலிய பலதலங்களும், மேற்கில் எருவலஞ்சுழி, வடகுரங்காடுதுறை, முதலியவைகளும்; தென்மேற்கில் திருவைகாவூர் விசயமங்கை; முதலிய பலவும், வடக்கில் திருப்பிரம்பியம், கோகறந்தபுத்தூர் முதலியவைகளும்; வடகிழக்கில் திருவாய்ப்பாடி, சேய்ஞலூர், திருப்பனந்தாள், திருமங்களக்குடி, கஞ்சனூர்முதலிய பலஸ்தலங்களும், இக்கும்பகோணத்துக்கு நான்குபுறத்தும் ஒருயோஜனைக்குள் விளங்கி இத்தலப்பெருமையை நன்கு புலப்படுத்துகின்றன.

இந்தக்ஷேத்திரம் கிருதயுகத்தில் மூன்றுயோஜனையும், திரேதாயுகத்தில் இரண்டுயோஜனையும், துவாபரத்தில் ஒருயோஜனையும், கலியில் அரையோஜனையும் விஸ்தீரணத்தையுடையதாயிருக்குமென்று சொல்லப்படுகிறது.

## க்ஷேத்திரம்

(1) அரையோஜனை விஸ்தாரமுள்ள இத்தலத்துள் கன்னியாதீர்த்தக்கரையில் வடபக்கத்தில் ஒன்பது கன்னியர்களோடு விசுவநாதரும்.

(2) கீழ்கரையில் மேல்திசையை நோக்கித் தீர்த்தாபிமுகமாய் அபிமுகேசரும்.

(3) மேல்கரையில் கிழக்குமுகமாய்க் கவுதமநாதரும்.

(4) இக்கன்னியாதீர்த்தத்திற்கு வாயுமூலையில், வில்வவகத்தில் பாதாளஇலிங்கேசர் என்றநாகேசரும்.

(5) இந்நாகேசருக்கு வாயுமூலையில் சோமேசரும்.

(6) இவருக்கு வாயுமூலையில் ஹேமரிஷிக்குத் திருமகளாகவந்த திருவைத்திருமணம் புணர்வான்வந்து அராவணையிற் பள்ளிகொள்ளு மாராவமுதனும்.

(7) இவர்க்கு நேர்மேற்கில் குடமூக்கிற் றோன்றியகும்பலிங்கேசரும்.

(8) கும்பஇலிங்கேசர்கோயில் மதிலுக்குத் தென்மேற்றிசையில், மாலதிவனத்தில், தூமகேதுமாமுனிவர் வேண்டுகோளுக்கிரங்கிக்காசியினின்றும் எழுந்தருளிய விசுவேசரும்.

(9) கும்பஇலிங்கேசருக்குவடக்கில் காவேரியின் தென்கரையில் எழுந்தருளிய ஆதிவராகப்பெருமாளும்.

(10) இவர்க்கு வடமேற்கில் காசிபருக்கருளிய இலக்குமிநாராயணப்பெருமாளும்.

(11) காவேரிக்குவடபால் மதங்கர்க்கு அருளிய வாதராசனும்.

(12) வரதனுக்குத்தென்பால் காவேரிநதிக்குத் தென்கரையில் சூரியனுக்கருளிய சக்கிரபாணியாகிய நரசிம்மனும்

(இக்கோவிலுக்குச் சமீபத்தில் எந்தப்பேய் பிடித்தவர் வந்தாலும் உடனே அப்பேயாடும் என்று புராணங் கூறுகிற படியே இப்பொழுதும் நடக்கிறது)

இச்சக்கிரபாணிக்கு நேர்கிழக்கில் பாணபுரீசரும் கோயில்கொண்டு அர்ச்சாவிக்கிரகங்களில் ஸாந்நித்தியமாக விருக்கின்றார்கள்.

(இவையன்றி இப்புராணத்துட் கூறப்படாது காளத்திநாதன், இராமன், வரதன், சாநாராயணன், வேதநாராயணன் முதலிய பலதேவாலயங்களும் இருக்கின்றன)

(இதைச்சுற்றி ஒரு குரோசத்திலுள்ள பஞ்சக்ஷேத்திரமும் அவற்றின் வைபவமும்,)

மத்தியார்ச்சுன வைபவம்:—

கும்பகோணத்திற்கு கிழக்கே இரண்டு குரோசதூரத்தில் விபண்டகர்என்கிறமுனி 24-சதுர்யுகங்கள் பக்தி சிரத்தையாய் அர்த்தநாரீசுரரைக் காணவேண்டுமென்னும் ஆசையோடு தபசுசெய்து கொண்டிருந்தார். ஈசனும் அவர் தவத்திற்கிரங்கி ஆநந்தத்தையுடையனாய் விருஷபாரூடனாய் பிருகத்குசாம்பிகா சமேதனாய்ச், சகலபரிவாரங்களுடனும் அவருக்குப் பிரசன்னனாய் அவர் இஷ்டத்தைப் பூர்த்திசெய்தனன், தைமாதம் பூசநட்சத்திரம் பௌர்ணமிதிதி மத்தியானம் அபஜித இலக்கினத்தில் அவருக்கு பிரத்தியட்சமாய் அவர் இஷ்டத்தைப் பூர்த்திசெய்து அவரால் பூசிக்கப்பட்டு அவ்விடத்திலேயே மகாலிங்கம் எனப் பெயர்பெற்று உகந்திருந்தனர், இந்த இடத்திலேயே காச்சியம் இருஷியானவர் 12 வருஷம் பாலகிருஷ்ணனைக் காணவேண்டித் தவம்புரிந்து அவரைப்பிரார்த்திக்க ரமாபதி அவர்தவத்திற்கிரங்கி மனம்பூரித்து அர்ச்சுனம்என்று பெயருடைய மருதமரத்தினடியில் அவருக்கு பிரசன்னமானான். பிரசன்னமான ஹரியைக்கண்ட காசியபர் ஆநந்தத்தினாற் பரவசமடைந்து பயித்தியம் கொண்டவனைப் போலத் துதித்துப் புகழ்ந்துகூத்தாடித் தோத்தரித்து அங்கேயே எழுந்தருளி உலகத்தாருக்கு அனுக்கிரகம்செய்ய வேண்டுமென்று, பிரார்த்திக்க, அவ்வண்ணமே ஹரிஹரன் என்னும் இருவரும் உலகத்திற்கு உய்வுண்டாகும் வண்ணம் ஓர் மருதின் இடைதோன்றினர். ஆனபடியால் அவ்வூருக்குத் திருவிடைமருதூர் என்றும் மத்தியார்ச்சுனம் என்றும் பெயருண்டாயிற்று (அர்ச்சுநம் மருதமரம்) தைமாதம் பௌர்ணமி அபிசித் இலக்கினத்தில் இந்தத் தலத்திலுள்ள காவேரியில் கலியாணதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்பவர் பிரமஹத்தியாதி பாதகங்களும் நீங்கி முத்தியடைவார்கள்,

மேஷத்திற்சூரியன் பிரவேசிக்குங் காலத்திலே (சித்திரைமாதப்பிறப்பிலே) மகாலிங்கத்தின் சந்நிதியிலுள்ள காருண்ணியா மிருததீர்த்தத்திலும், ஈசாந்யதிக்கிலுள்ள காருண்ணியாமிருத தீர்த்தத்திலும்; உரோமசனுக்கு ஞானம் கொடுத்ததும் கருநீறகாக்கையுடலம் பொன்னிறமாக்கியதும் வாயு திக்கிலுள்ளதுமாகிய தீர்த்தத்தில் வைகாசிமாதத்திலும் ஸ்நாநம் செய்பவர்கள் எவ்வித பாதகத்தினின்றும் முக்தர்களாகி நற்கதியடைவார்கள் என்பதற்குச் சந்தேகமேயில்லை. இத்தலம் கும்பகோணத்தைச் சேர்ந்த பஞ்சக்ருரோச க்ஷேத்திரங்களி லொன்று இத்தலத்தில் மூன்று தீர்த்தங்களுள் அவற்றில் மூழ்கினோர் பெரும்பல னடைவார்.

## கும்பேசர் மகோச்சவம்.

ஆதிகும்பேசருக்குத் திருவிழாநடத்தப் பிரமதேவர் உத்தேசிக்க, மாலேமுதலிய வானவர்யாவரும் குடந்தையையடைந்தார்கள். இப்பதியுள்ளார், நக ரலங்கரித்தனர். ஆகாயம் அளாவிய பந்தலமைத்து, அதற்குத்தக்க விதானங்கட்டி, வாசமாலை நாற்றி, இளநீர்க்குலைதூக்கி, கரும்பும், வாழையும் காலில் ஆர்த்து வீதிகள் புதுக்கினர், வீடுகள்யாவும் வெண்சுதைதீற்றி, நீறு மெய்பூசிய நிமலர்போலாக்கினர்.

பிரமதேவர் மாசிமாதத்தில், சட்டிதிதியில் விதிப்படியெழுதிய விடைக்கொடி யேற்றினர்; மறைகள் முழங்கின, வாத்தியம் சப்தித்தன.

கொடியேறின தினத்தில் இந்திரவிமானம் எம்பிரானுக்கும், தம்தம்வாகனம் பிள்ளையார் பிராட்டியாருக்குமாக்கி, பஞ்சமூர்த்திகளையும், வீதிக்கு எழுந்தருளப் பண்ணவி.

னர், மறுநாள்முதல் ஒருநாள்போலச் சிவபெருமான் சேடன், பூதம், யானை, இடபம் கயிலை, பூரதம், குதிரை முதலிய வாகனத்து எழுந்தருள மற்றையவர் தத்தம் வாகனம் கொண்டு வந்தனர். எட்டுநாள் உச்சவம் இப்படியாக மற்றுநாள் பொற்றேருலாப் போந்தருளிய எம்பிரானைக் கண்டோர் யாவரும் களித்துத் துதித்தனர். பெண்டிர் மட்டுமே மயங்கித் தவித்தனர்.

1. மன்மதனை யழித்தநீர் மன்மத ரூபங்கொண்டது, பழிமாற்றவோ வென்பார் சிலர்.

2. முன் ஒரு அமுதகுடத்தில் பொருந்திய நீர், எம் இரு அமுதகுடத்திலும் பொருந்துதல் தகும் என்பார் சிலர், (இரு அமுதகுடம்—தனம்)

3 மயன் அமைத்த தேரினும், அயனமைத்த தேர் அதிக விசேடம் என்பார் சிலர். (அயனமைத்ததேர்—அல்குற்றடம்)

4, பாதிமங்களம் ஆனநீர், மீதிமங்களம் ஆம்படி எங்களைச்சேரும் என்பார் சிலர் .

5. தக்ஷன்புத்திரியைக் கொண்டவன், விதிமகளைக கொள்ள விதியின்று என்பீரேல் விதிவிலக்கு உமக்கேது காணும் என்பார் சிலர்.

6. மாணுகிய எங்களுயிரை மாய்க்கத்தான் முன் வேடரூபம்கொண்டு வெளிப்பட்டீரோ என்பார் சிலர்.

7. எல்லாரும் இரக்கப்புகுந்தால் இவர்க்கு எப்படித் தான் கொடுக்க இயலும் என்பார்.

8. அறிஞர் யாவரும் ஆசைப்படத்தக்கவர் என்று கேட்டு ஓடிவந்தோம், இப்படித் திகம்பரராய் நிற்பார் என்பது தெரிந்தோம் இல்லையே என்பார்.

9. கண்டோரெல்லார்க்கும் கவலையைத் தரும் உமக்குச் சங்கரப்பேர் தந்ததார் என்பார். (சங்கரன் மகிழ்விப்பவன்.)

10. காமனையெரித்தவர் என்பது அறிந்தும், காமித்தல் நங்குற்றமே அன்றி அவர்குற்றம் அன்று என்பார்.

இவ்வண்ணம் உலாப்போந்த இறைவனை தேரினின்றும் இறக்கி, திருக்கோயில் சேர்த்தனர் பிரமதேவர்.

(பத்தாநாள் அவபிருத ஸ்நானம் மகதீர்த்த மகிமையிற் காண்க.)

## பஞ்சகுரோசஸ்தலங்கள்

திருவிடைமருதூர், திருநாகேஸ்வரம், திருத்தாரேசம், திருவரகம், திருப்பாடலவனம் என ஐந்தும் கும்பகோணத்தின் பஞ்சகுரோசஸ்தலங்கள்.

பிராட்டி மங்களநாயகி கைலையைவிட்டு குடந்தையை வமய காலத்து அமுதத்தால் நனைந்த பஞ்சகுரோசதூரம் வலம்வந்து பதியுட் புகுந்தாளெனின் மற்றவர்க்குச் சொல்வானேன்? கும்பகோண ஸ்தலயாத்திரை செய்யப்புகும் எவரும் இடைமருதூர் முதலாகப் பாடலவனமீறுகப் பஞ்சகுரோசஸ்தலங்களை விதிப்படி தரிசித்து, ஒவ்வோர் பகல் தங்கி வலம்வந்த பின்னரே கும்பகோணப் பிரவேசம் செய்ய வேண்டும், செய்தாலதான் யாத்திரை பலன் பூர்த்தியாகக் கிடைக்கும்.

### 1. திருவிடைமருதூர்.

இது கும்பகோணத்திற்குக் கிழக்கே, இரண்டு குரோசத்துள்ளது. உலகோருய்ய அம்மை பொருட்டுச் சிவபெருமான் தன்னைத்தானே பூசித்தஸ்தலம் விநாயகர், சுப்ரமண்யர் பிர்மா, விஷ்ணு, வரகுணபாண்டியர் ஆதி

யோர், பூசித்திருக்கின்றனர். வரகுணதேவர்க்குப் பிர்ம ஹத்தி நீங்கியது. (இது சோழன் பிர்மஹத்திப்பெயர் தவறுகப் படைத்துக் கீழ்க்கோபுரவாயிலில் இருப்பதை இன்னும் காணலாம்) தைப்பூசத்தில் விபண்டருக்குக் காட்சி அளித்ததால் இத்தலத்துக்கு அந்நாள் விசேஷம்.

## 2. திருநாகேஸ்வரம்.

கும்பகோணத்திற்குத் தென் கீழ்த்திசையில் ஒரு குரோச தூரத்தில் திருநாகேசசரமுள்ளது, இத்தலத்திற்கு சண்பகாரண்யமென்றோர் நாமமுண்டு. இத்தலத்தை, ஆதி சேஷன் அடைந்து சண்பக வனமொன்று உண்டாக்கி, நூறுவருடம் தவம்செய்து நினைத்தபல னெல்லாமடைந்து பிறகு பதினயிரம் வருஷம் தவம்புரிந்து நாகவாவியென ஓர் தடாகமியற்றி, அத்தடாகக் கரையில எழுந்தருளியிருந்த பரமசிவனுக்கு நாகநாதனென பெயர்வைத்து, அவ்வூரின் தடாகத்தில்மூழ்கி நாகநாதனை தரிசித்தவர்க்கு சகல பாப மும் போகவேண்டுமென்றும், சிவசாயுச்சியபதம் தரவேண்டு மென்றும் பிரார்த்தித்து, அவ்வாறே வரம்பெற்றனன். நாகேசனுகிய ஆதிசேடனுல் பூசித்த தலமாதலால் நாகேச் சுரமெனப் பெயர்வாய்ந்துளது. இத்தலத்தில் கார்த்திகை சோமவாரம் ஆதித்தியன் பூசித்து மூழ்கி பெரும்பேறு பெற்றான். ஆதலால் அத்தீர்த்தத்திற்கு ஆதித்திய தீர்த்த மென பெயருளது. இத்தீர்த்தத்தில் கார்த்திகை ஆதித் தியவாரம்மூழ்கி நாகேசனை பூசிக்கவேண்டும். தருமதேவதை அந்நீராடி பேர்பெற்றதால் தருமதீர்த்தமென்றும் பெயர் உளது.

வாசுகி கார்த்திகை சோமவாரம் வந்து மூழ்கி முதல் ஜாமத்தில் நாகேசரையும், இரண்டாம்யாமத்து சமிவநேச

ரையும், மூன்றாம்யாமத்து புன்னாகவனேசரையும் பூசித்து நாலாம் யாமத்தில் மாதலம்புருந்து, இம்மூவரையும் நினைத் துத்துதித்து முத்திபெற்றார். இதனாலுந் திருநாகேச்சரத் திருநாமமுண்டாயது. இத்தலத்து ஒருநாள் உற்றுச் சிவ நாமங்களை வசனிப்பாராயின் முத்திபெறுவது திண்ணமென் பது மேலே வாசுகிப் பூசைப்பலனால் விளங்கும். மூர்த்தி விசேட மிங்ஙனமாகத் தீர்த்தவிசேடம் செப்புதற்கரியது.

ஆதிசேஷன் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதில் அநேக வருஷம் மூழ்கிவந்தார்; பின்னர்ச் சூரியன் மூழ்கிய கார ணத்தால் சூரிய தீர்த்தம் ஆயது. கார்த்திகை ஆதிவாரம் அத்தீர்த்தம் ஆடவிசேஷம்.

திருநாகேசுவரம் என்னும் தலத்திற்கு தென்புறத்தில் அதிசமீபத்தில் ஆகாசநகரமென்று பெயரையுடையமூன்று உலகங்களிலும் பிரசித்திபெற்ற துளஸீவனத்தில் மார்க் கண்டேயமகாரிஷியானவர் தனக்கு ஒருபெண் மகவுவேண்டி மகாவிஷ்ணுவின் மார்பைத்தனக்கு இடமாகக் கொண்ட கமலலோசனியாகிய இலக்குமியைக் குறித்து துதித்து ஆயிரவருஷம் நியமவிருத்தோடு உவர்ப்புமுதலிய உருசி களையும் கீரைமுதலிய பதார்த்தங்களையும் தள்ளி உண்டு பக வத்தரிசனமே முக்கியமாகக்கொண்டு தவஞ்செய்தனர். அவ ருடைய தவத்துக்கு இரங்கி உலகமாதாவாகிய விஷ்ணுபத் னியும் ஓர் இளங்குழந்தையாய் அத்துளசிவனத்தின் ஒரு துளசிச் செடியினடியில் எழுந்தருள அக்குழந்தையைக் கண்ட மார்க்கண்டேயர் ஆனந்தபரவசனாய் தரித்திரன் கண்டநிதிக்கு வியலைப்போலக்கண்டு எடுத்துவந்து வளர்த்து வருநாளில் அப்பெண்ணின் ரூபலாவண்ணியத்தைக் கண்டு "இப்பெண்ணுக்குத் தகுதியான புருஷன் எங்குளனோ பிர மாதிதேவர்களும் இவள்கட்டழகுக்கு ஒப்பாகார்கள் ஆத

லால் இவளுக்குப் பதிவைகுண்ட பதியே யென்பதற்குச் சந்தேகமேயில்லை என நிச்சயித்துக் கொண்டிருக்குநாளில் ஒருநாள் விஷ்ணுவே கிழப்பிராமண வேடம்பூண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்துகொண்டு மார்க்கண்டேயரிடம் வந்தார். அவரைக்கண்டவுடன் மார்க்கண்டேயரும் எழுந்து எதிர்சென்று அர்க்கியபாத்திய ஆசமனியம் கொடுத்து அவர்பாதத்தைச் செவ்வையாய் அலம்பித் துடைத்துப் பிராமணோத்தமா, தங்களுக்கென்ன விருப்பமோ அவற்றைக்கேட்கவேண்டும், மாத்தியான்ன காலம் வீணுகப்போகிறது" என்றுகேட்டார். அதற்கு அந்தக் கிழப்பிராமணன் "ஓய் மகாரிஷியே நீர் நிரம்பநல்லவரென்று கேள்விப்பட்டிருக்கிறேன், எனக்கோ சந்ததிகிடையாது; சம்சாரத்திலோ விருப்பமுள்ளவனாய் இருக்கிறேன், உம்முடைய கன்னிகையை எனக்குக் கொடுக்கவேண்டும்; கிழவனாகிய எனக்கு உதவிசெய்வதற்கு வேறொருவரும் இல்லை; இப்பெண்ணால் எனக்கு மிக்க உபயோகமுண்டாகும்" என்று வேண்டிய கிழப்பிராமணனையும் தனது பெண்ணின் இளமைப்பருவத்தையும்யோசித்து, மனம்வருந்தித் தனது பெண்ணிடம் சேர்ந்து, "என்கண்மணியே: உன்னை இந்தக் கிழவனுக்குத் தானம்செய்வதால் நான் பெரும்பயனை அடைவேன்; இல்லாவிட்டால் அதிதியாகிவந்த இக்கிழவன் எனது புண்ணியங்களையெல்லாம் கொள்ளைகொண்டு போய்விடுவான். இது உனக்குத் தெரிந்ததுதான். நான்செய்யும்காரியம் யாதொன்றும் தோன்றாமல் விழிக்கிறேன்" என்றுகூறிய மார்க்கண்டேயரைநோக்கி, உலகமாதாவாகிய கமலை ஒன்றுமறியாத சாதாரணப் பெண்ணைப்போல் "என்ஐய: நாளை (அப்பிரௌடையான யௌவனை (சிறுபெண், வீட்டில் என்னை வேண்டிவந்திருப்பவரோ கிழவராயும், கோபத்தால் சிவந்த கண்களை யுடையவராயும் இருக்கிறார். வீட்டுக் காரியங்

இச்சுதர்சனனைச் சூரியன் கண்டு கவன்று என்னொளிக்கு எதிரொளி காட்டிய இன்னன் யாரென அறிவேன் என்று அதி கோபத்துடன் தாவியெழுந்தனன். தன்னொளி மழுங்கிப் பின்னிடக் கண்டு தளர்ந்து அச்சம்மீதுறச் சக்கர அண்ணலைத் தரிசித்துப் பூசித்தனன். ஓர் யாகம் முடிக்கும் பொருட்டு கும்பகோணத்தை உற்ற பிரமதேவரும் அச்சக்கர அண்ணலைக் கண்டு ஆனந்தங்கொண்டு ஆலயம் அமைத்துப் பூசித்துப்போயினர். இச்சுதர்சனனைப் பூசித்தவர் இன்னுமனந்தம். இத்தகு சுதர்சனனை வில்வத்தாலாவது, குங்குமத்தாலாவது அருச்சிப்பவர்களைப் பூத, பிரேத, பைசாசங்கள் நெருங்கா; பொன்னும் மணியும் மிகப்பெருகிச் செல்வர்களாவர்கள்.

இதரிசனன் சேமிக்கப் பட்டிருந்த காவிரித்துறை (சக்கர தீர்த்தம்) இது காசிபதீர்த்தத்துக்கும் பகவதீர்த்தத்துக்கும் இடையிலுள்ளது. இதில் பிரமன் ஆடிச்சுகித்தனன். இதைப் பரிசித்தாலும், தரிசித்தாலும் பக்தியிற் சிறந்த சித்தராவர். கறுப்பெள்ளால் தர்ப்பணம் பண்ணினால் பிதிர்க்கள் கரையேறுவர். இறந்தவர் அங்கத்தை இதில் சேர்க்க உத்தமம். இதிலாடும் பலன் அநந்தம்.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# வராக பெருமான் வரலாறு.



பிரமபுத்திரர்களாகிய, சில முனிவர்கள் மலர்மகட்கிறைவனைத் தரிசிக்க வைகுந்தம் சென்றனர். வாயிற்காக்கும் ஜயர், விஜயர் இருவரும் சமயமல்லவென்று தடுத்தனர். விரதியர் கவன்று நின்றனர். இஃது அறிந்த இலக்குமிகாந்தன் வாயிற்புறம் வந்து, வானவரோ, மண்ணவரோ யார் வரினும், நமக்கு அறிவியுங்கள் என்று செய்திருந்த உத்தரவுக்கு மாறாகப் பொய்மொழி புகன்று, புனிதரைத் தடுத்தீர்; நமதாணையைக்கடந்த நீவிர் இங்கு அரைக்கணமேனும்

தரித்தல் தகாது ; அடாதன செய்யும் அசுரர்களாகக் கட வீர் என்று சபித்து, துரத்தினர். நித்தியானந்த வைகுந் தத்தில் நீடூழிவாழ்ந்தவரும், ஓர் பொய் உரையால், வெய்ய அசுரராகுவரெனின் பொய்யன்றிப்பிறிது புகலாதார் புகுங் கதியாதோ அறியேம். வாயிற் காப்பாளர்கதி இங்ஙனமாக வந்த முனிவரர் மகிழும்படி சேவைதந்து, செலவிடுத்து ஸ்ரீ பதியும் இருந்தனர். சென்ற ஜயர் விஜயரிருவரும், இர ணிய இரணியாக்கதராய்ப் பிறந்து, அரியதவம் செய்து பெரியவரம் பெற்றனராய், மூன்று லோகங்களையும் படாத பாடு படுத்தினர், தேவர் யாவரும் மாயவன் திருமுன் எய்தி, மண்ணுலகைக்காத்து வானவர்க்குச் சாகாமருந்தளித்த தயாளுவே ! உமது சாபம் பெற்ற ஜயர் விஜயர்கள் இரு வரும் இன்னின்னராகிப் பண்ணும் கொடுமை பகரவொண் ணாது. இரணியாக்ஷன் எங்களை இம்சைபண்ணி, பாருல கைப் பாயாய்ச் சுருட்டிப் பாதாலம் புகுந்தனன். இக்கதி யாங்கள் அடையப் பார்த்திருப்பது பரந்தாமபதியே, உமக் கழகோ எனக்கேட்ட அண்ணலும் அபயமளித்துப் பாதா ளம் செல்லுதற்கு யாதுருக்கொள்ளலாம் என எண்ணி,பிரு குமுனிவர் சொல்லிய சொல் நிறைவேறவும், தேவர்கள் யாவ ரும் துயரக் கடலினின்று கரையேறவும், அசுரர்கள் யாவ ரும் அந்தகனூரில் குடியேறவும் வராகரூப மென்றெடுத்த னர். அந்த வராகம் விண்ணை உரிஞ்சும் முதுகும், வெண் பிறை ஒத்த மருப்பும், திக்கியானையைச் செருக்கும் கண் ணும், வெற்பனைத்தும் வீழ்த்தும் வாலும், இடியையடைக் கும் குரலும், மலையையடக்கும் குளம்பும், ஊழிக்காறை உட்கொண்டு இரைக்கும் மூக்கும் உடையதாம். இந்த உருக்கொண்டு,பாதளம் புகுந்தும் வெந்த கண்ணனை வெண் மருப்பு ஒன்றால் வீட்டி மற்றொரு மருப்பில் பூதலத்தை

ஏற்றி, பாதலத்தை நீத்து மேலே யெழுந்து, மண்ணுலகை தன்னிலையில் நிறுத்தினராம் வராகப்பெருமான். இவர் பாதலத்தினின்றும் வெளிப்பட்ட துவாரம் குடந்தையிற் பொருந்தியது. இத்துவாரமே வராகதீர்த்தம், அத்தீர்த்தத்தின் மேல்கரையில் ஒற்றை மருப்புடை வித்தக விநாயகரை ஸ்தாபித்து, அதன் கீழ்கரையில் தாம் கோவில் கொண்டருளினர். இந்த வராகதீர்த்தத்தில் ஆடி, வராகப்பிள்ளையாரைப் பூசித்து, வராகப்பெருமானைச் சேவிப்பவர் மண்ணும் விண்ணும் ஆண்டு பிறவா நன்னெறியும், பின்னர் பெற்று உய்குவர். மாகப்பூரணையில் இடபலக்கனத்தில் இவ்வண்ணம் நிகழ்ந்ததாதலால் இதுவே இத்தீர்த்த மாடுதற்கு ஏற்ற புண்ணிய காலம்.



உ

# கருப்பாயிரப்பிள்ளையார் வரலாறு.



ஒற்றைக்கொம்பும், இரட்டைச் செவியும், முக்கண்ணும் நால்வாயும், ஐந்து கரமும், ஆறெனப்பெருகி எழுமத தாரையும், எண்குணமும் வாய்ந்த, வராகப்பிள்ளையார் மூவுலகும் தொழுதேத்தப், பூவராக தீர்த்தக்கரையில் அமர்ந்தி

ருந்தனர், உத்தராயண புண்ணியகாலத்தில், கும்பேசரைத் தரிசிக்க முனிவராதியோர் கும்பகோணத்தையுற்றனர். அவர்களுடன் கரும்பு வியாபாரி ஒருவன் கண்டோர் யாரும் இது கரும்பன்று, கமுகே எனக்கொண்டாடத்தக்க ஆயிரம் கரும்புகளை வண்டியிலேற்றிக் கொண்டுவந்து வராகதீர்த்தக்கரையில் தங்கினன் அங்கு எங்கள் ஆண்ட கைப்பிள்ளையார், ஓர் விளையாட்டயர்கின்றார். பிள்ளைத்தனம் விளங்கிடவோ, கரும்பில் தனக்கிருக்கும் பிரியத்தைக் காட்டிடவோ, தான்கொண்ட வேழப்பெயரை இக்கரும்பு ஏன் கொண்ட தெனச்சினந்தோ, அன்பிற்சிறந்த வணிகற்கு அருள் புரிய நினைந்தோ, எதனால் இவ்விளையாட்டயர்ந்தனர் என யாமறியோம். இறைவனார் பெரிய பிள்ளையாகிய தான், ஓர் மறையவர் சிறு பிள்ளையாகவந்து வணிகன் முன்னே நின்று வணிகர் பெருமானே ! வண்மையிற் சிறந்தோனே ! ஆசீர்வாதம் என்றனர். வணிகன் பேசாதிருக்கக் கண்டு ஏன் ஆசீர்வாதத்தை அலட்சியம் செய்தாய் என, பிள்ளையார் கேட்க, ஆசீர்வாதம் என்னவேண்டியிருக்கிறது, காரியம் உண்டானாற்பேசு என வணிகன் சொல்ல, யானொரு வைதிகன் பிள்ளை, என் கையில் காசு இல்லை, கரும்பைக் கண்டவுடன் வாயூறுகிறது, ஒன்று கொடுத்தால் எனக்குப் போதுமானது, உனக்கும் க்ஷேமமுண்டாகும் என்றனர். கரும்பை விற்றுக் காசாக்க வந்தேனேயன்றி, பார்ப்பாரக் குட்டிகளுக்குப் பங்கிடவந்தேனில்லை போ அப்பாலேஎன்று உறுக்கினன். அண்ணலும், உன்னிடத்தில கரும்பு வாங்காமல் ஒருக்காலும் போகேன் என்றார், வெறும்பேச்சுக்குக் கரும்பேது, காசு என் கைஏறினால் கரும்பு உன் கை ஏறும் என்று வணிகன் சொல்ல ; அய்யனும், அடே ஒருகரும்பு தரமாட்டாயா ? ஆயிரம் கரும்பும் அப்

படியே கொண்டுபோகிறேன் பார் என்றார். பணத்தைக் கொட்டினால் வண்டியும் கூடக்கொண்டு போகலாம என்னன்; நீ கொடாதகண்டனாயிருக்கிறாய், நான் விடாத கண்டனுக்கும், நீ கொடுக்கிறையா, நான் எடுத்துக்கொள்ளவா,ஏய்க்க இயலாது என; வணிகன், அடே! துடுக்குப்பேசி நில்லாதே, நின்றால் புடைத்தே விடுவன் என்றான், கிட்டேவா பார்க்கிறேன் என்று ஒரு கரும்பைத்தொட்டார்; விட்டேனாபார் என்று வணிகன் கிட்டினன். செத்தேன் எனப் பயந்தவர் போல் ஓட்டங்காட்டி, மீண்டும் சேட்டைக்கு ஆரம்பித்தனர். இவ்வாறவன் வெருட்ட இவர் அலட்ட சங்கதி ஊரெல்லாம் பரவியது. அய்யன் கடைசியாய் ஓடி இளைத்தார்போலக் கோயிலுக்குள் புகுந்தனர். புகுந்த பிறகு கரும்பு ஆயிரத்தின் சாரத்தையும் அப்படியே வாங்கிவிட்டனர். செங்கரும்பெல்லாம், பேய்க்கரும்பிற்கும் பிறபட்டதாயின. வணிகன் மெய்நடுங்க அய்யோ கெட்டேன் ஒரு கரும்பு தாவென்று உழன்றவன் இவ்விடம் தங்கிய உத்தமனே. என விதிர் விதிர்த்து, மெய்நடுங்கிக் கைமுகிழ்த்து வேண்டிநின்றனன். அண்ணலும் அவனன்புக்கு மகிழ்ந்து கரும்புக்குச் சாரத்தை மீட்டுமளித்தனர். வணிகன் கரும்பு முதலிய சிறு நிவேதனங்கள் பெருக அமைத்துப் பூசைபுரிந்து, ஆலயப்பணிகள் அளவற்றனசெய்து, 'கரும்பாயிரப் பெயரை' அருங்களிற்றண்ணலுக்கு ஆக்கி, அழியாவின்ப வீடடைந்தனன். இக்கணபதியை யாவர்போற்றினும், அவ் வணிகன் பெற்றபேறு உற்றுவாழுதல் திண்ணம்.

---



ஸ்ரீ

# வரதராஜப்பெருமான் வரலாறு.



வான்றொடு குடுமி வாயாத மயேந்திரகிரியில் மதங்க ரிஷி, மகத்தான தவஞ்செய்து வந்தனர். இவர் நல்வழியிலே நடந்து, அல்வழியை அகன்று, மாயையைக்கடந்து, வரம் பல அடைந்தவர். சேது, குடந்தை, காஞ்சி ஆகிய மூத்தலங்களேயும், நித்தலும், காலே, உச்சி, மாலேகளில் முறையே தரிசித்துப்பின் சாப்பிடும் நியதி பூண்டவர். இந்நியதியில், ஒருநாள் குடந்தையை யடைந்து மத்தியக்கடன் முடித்து, கச்சியிற்சென்ற கருத்தினராய் குடந்தையிலிருக்கையில், ஆகாயத்துள்ள மேகங்கள் அனைத்தையும் ஒருங்கே அழைத்துச் சொர்ணமாரி சொரிகவெனப், பரந்தாமபதி ஆக்ஞா

பிக்க ; அவ்வண்ணமே மேகங்கள் மாரிபொழிந்தன. முகிற் குலத்தின் இடி முழக்கம் ஒருபுறம், தருக்குலங்கள் ஒடி முழக்கம் ஒருபுறம் குளக்கரைகள் முடிமுழக்கம் ஒருபுறம் (முடிதல் - இடிதல்) ஜலக்குழியில் படிமுழக்கம் ஒருபுறம் கொழித்தன, முகில்தாரையால் விண்மறைந்தது, மழைத் தாரையால் விண்மறைந்தது, மழைத்தாரையால் கண்மறை ந்தது, ஜலத்தாரையால் மண்மறைந்தது. மின்னல் எழுவ தும், இடிகள் விழுவதும், வாடை சுழல்வதும், மழைநீர் இழிவதும் மட்டுமிதம் இல்லை. உகமுடிவு வந்து.உற்றதோ என்பர், விமலன் சடைக்கங்கை மற்றதோ வென்பர். இவ் வண்ணம் மழை பொழியக்கண்ட மதங்கர் மழையோ பொழி கிறது, பொழுதோ கழிகிறது வரதன் தரிசனம் ஒழிகிறது, விரதம் அய்யோ அழிகிறது ; எளியேனை இப்படிப் பரிக்ஷிக் கும் எம்பிரான் திரு உள்ளம் என்ன இரும்போ ? என்னு யிர்தான் என்ன கரும்போ? மழை விட்டாலாச்சு, விடா விடில் மாய்க்கிறேன் உயிரை என்று, ஆரம்பித்தனர். வரத ப்பெருமானும, இனி இறையேனும்,தாழ்க்கலாவது. தாழ்ந் தால் தாழ்வுவரும், என்று கலுழனை நினைந்தார், கலுழனும் கணத்தினில் ஓடிவந்து மரத்தின்கீழ் நின்ற மதங்கர் முன் னிறுத்தான். கண்டமுனிவர் தெண்டனிட்டு நிற்க, வரதன் ஓ ! மதங்க, உன்பொருட்டு யாம் கச்சியைவிட்டு இப்பதி வந்தனம் வேண்டியது கேள் என அய்ய அடியேற்கு முத்தி யருளவேண்டும் ; என் பொருட்டாடிய இத்திருவிளையாட் டையாரும் என்றும் அறியும்படி, தேவரீர் இவ்விடத்தே கோயில் கொண்டருள வேண்டும் ; இத்துறை என்பேர் கொண்ட தீர்த்தம் ஆகவேண்டுமென, அய்யனும் அவ்வா மெல்லாம் அளித்து ஆங்கு வீற்றிருப்பாயினர்.



உ

கடவுள் துணை.

# கைலாயநாதர் வரலாறு.



கேதாரம் என்னும் க்ஷேத்திரத்தில், பிப்பிலாதன் என்றொரு பெரியவர் வசித்தனர். அவர் பிறை முடிப்பிரானை யுன்னி அரிய தவம்புரிய, அரவணியண்ணலும், அருந்தவன் முன்றோன்றி ஆகவேண்டியது யாதென வினவ, அமரர் பெருமானே உம்மைக் காண்பதினும் உயர்ந்தது யாதுமில்லை ; ஆயினும் யான் என்னம்மை பங்கில் அமர்ந்த உந் திருக்கோலம் கைலையிற் கண்டுகளிக்கக் கருத்துட் கொண்டனன், கடாக்ஷித் தருளவேண்டும் என்றனர். அண்ணலும் அதற்கிசைந்து ஹே! பிப்பிலாத, கும்பகோணத்தை யடைந்து நமது கும்பலிங்கக் குறியைப் பூசிப்பையேல், நீ வேண்டிய காட்சியைப் பெறலாம் என்றனர். முனிவர் கேட்டு வெகு நாள் நோற்று மூப்புமேலிட்டு மெலிந்து இருக்கும்



உ

கணபதி துணை.

# கும்பகோண

# ஸ்தலபுராண வசனம்.

## முதல் பாகம்



### ஆதிவிநாயகர் துதி.

பூமேவு தமதருளா லுயர்வுமுயர் விலதுஃமெனப்
புவனங் கூறும்
மாமேவு மொழிக்கியைய உயர்திணையி னஃறிணைமா
வதனங் கொண்டோர்
பாமேவு முறையிணைந்து மருளமைந்து பயில்வதுபோல்
பயிலா தென்றும்
தாமேவு வருளமைந்த ஆதிவிநாயகர் சரணஞ்
சார்ந்து வாழ்வாம்.

திருஞானசம்மந்தமூர்த்தி நாயனார்

பண் பஞ்சமம்.

அறவிரி கோடனீடலணிகாவிரி யாற்றயலே
மரவிரிபோதுமௌவன் மணமல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழகன் குடமூக்கிடமா
யிரவிரி திங்கள் சூடியிருந்தானவ னெம்மிறையே.
வெண்கொடி மாடமோங்கு விரல் வெங்குருநன்னகரா
னண்பொடு நின்றசீரான் றமிழ்ஞான சம்மந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தா னடிசேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப்பெய்துவர் வீடெளிதே.

---

திருநாவுக்கரசு நாயனார்.

திருத்தாண்டகம்.

ஏவியிடர்க்கட லிடைப்பட்டிளைக்கின்றேனை
யிப்பிறவியறுத்தேற வாங்கியாங்கே
கூவிமல ருலகனைத்து முருவிப்போகக்
குறியிலறுகுணத்தாண்டு கொண்டார்போலும்
தாவிமுதற்காவிரி நல்லமுனை கங்கை
சரஸ்வதிபொற்றாமரைபுட் கரணிதெண்ணீர்க்
கோவியொடுகுமரிவரு தீர்த்தஞ்சூழ்ந்த
குடந்தைக்கீழ்கோட்டத் தெங்கூத்தனாரே.

---

தலவிசேடம்.

கடல்வளையுலகிற் புரிந்த பாதகங்கள் கருதொரு
சிவத்தலத்தொழியும்
விடலருமனைய சிவத்தலத்தியன்ற வெய்யபாதக
மெலாநாளும்
படலருங்காசிப்ப திவயிற்றீரும் பகர்ந்த காசியிற்
செய்பாதகங்க
ளடல்கெழு கும்ப கோணத்திற்றீரு மங்கியற்றினு
மதேதீர்க்கும்.

# 1. கும்பேசர் வரலாறு.

பூர்வம் பிரமதேவருக்குத் தினகற்பம் உண்டாகவே, சிருட்டிபீசம் சிதையுமோவெனக், கவலையுற்றவராய் அவர் கயிலையங்கிரியையடைந்து சிவபெருமானைத் தரிசித்து சக பீசம் அழியாவகை தந்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்க, சங்கரப்பிரபுவும் ஓ! புங்கவ, கவலையுறல்வேண்டாம் அமிர்த மும், ஜலமும் மண்ணிற்கலந்து பிசைந்து, அழியாத குடம் ஒன்றுசெய்து, அமுதகலையைப் பூணூலாச்சாத்தி, உமக்கு ஏற்கனவே ஏராளமாய்க் கொடுக்கப்பட்டிருக்கும் சகபீஜங் களை அதனுள் மத்தியில்வைத்து வேதம், ஆகமம், புராணம், இதிகாசங்களை நாற்புறமும் வைத்து நிறைய அமுதம் பெய்து, மாவிலை சொருகி, தேங்காய்சாத்தி, தருப்பை முடி சேர்த்தி, வில்வபத்திரங்களால் அருச்சித்து, உறியிலேற்றி மேருவின் மேல்பாரிசத்தில் சாயாமல் தூக்கிக்கட்டி அங்குத் தரித்திரும்; பிரளயமுண்டாக, அமுதகுடம் அசைந்து, தென்றிசை நோக்கிச்சென்று, ஓரிடத்தில் தங்கும், அதிற் சென்று பீஜங்களை எடுத்துப் பிரமசிருட்டியைச் சரிவர நட த்தலாமென்று திருவாய்மலர்ந்தனர்.

பிரமன் உடனே அவ்வாறு ஓர் கலசம்செய்து, அமுர் தம்நிறப்பி, பீஜத்தை ஊன்றி அக்கும்பத்திற்கு நூல்சுற்றி, மாவிலைசொருகி அதின்மீது பூணூலும் தருப்பமும் சாத்தி வில்வம், சந்தனம் முதலியவைகளால் பூஜைசெய்து மேரு பர்வதத்தின் தென்றிசையின் ஓரிடத்தில் உறியிலேற்றி சாயாமல் தூக்கிக்கட்டினர். பிறகு பெருங்காற்றுடன்கலந்த பெருமழையால் பிரளயந்தோன்றி சராசரங்க ளெல்லாவற் றையு மழித்து, மலைகளெல்லாம் தன்னுள்ளடக்கி எழுந்து மேருவையும் முழுகசெய்து அமுதகுட மசைந்து மிதந்து

தருப்பை பூணூல், தேங்காய், மாவிலை, வில்வம் முதலியவை களுடன் வெள்ளத்தில் மிதந்து தென்றிசையிற் சென்று, எந்நாட்டிற்கும், முன்னாட்டத்தகும், தென்னாட்டுள், நன்னாடாகிய சோணாடே பெரிதென்று யாவருங்கொண்டாட, அங்கு ஓரிடத்தில்சாரச் சிவபெருமான் சொல்லி அருளிய வாறு குடம் சுழல, மாவிலையும் தர்ப்பையும் கீழேவிழ, அங்கே மாவிலை வன்னிமரமாகவும் அம்மரத்தடியில் அத் தருப்பையோர் இலிங்கவடிவாகவும் தோன்றி அவ்விடம் சமிவனமென்னும் (திருப்பிரம்மியம்) அவ்விலிங்கம், சமிவனேசரென்றும், தருப்பை இலங்கமென்றும், சாக்ஷீசர் என்றும் பெயருடையதாயிற்று, இவ்விலங்கத்தைச் சப்தகன்னியர்களும் ஜலரூபியாய்சசூழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இது திருக்கலச நல்லூர் (சாக்கோட்டை) இப்பால் குடம் இத்தலத்திற்கு வாயுதிக்குநோக்கி ஒன்றரைக்கு ஒருகுரோசம் முக்கால்நாழிகைவழி இரண்டுநாழி வழியென்றும் இரண்டரைநாழிகைவழியென்றும் கூறுகின்றார்கள். ஆனல் இங்கு இரண்டரைநாழிவழியென புராணம்கூறுகின்றது.

குரோசதூரத்தில் சென்று தங்கியவுடனே பரமன்திருவருளால் "இத்தலம் இப்பூமியிலுள்ள எல்லா க்ஷேத்திரங்களினும் மேன்மையுடையது" எனவொரு அசரீரவாக்கு உண்டாயிற்று அதேசமயத்தில்; பிரளயங்கண்டோர் அதிசயிக்கும்விதமாய் அரைகணத்தில் வெள்ளமும் கொஞ்சங்கொஞ்சமாய் வடிந்து அடங்கியொடுங்கியது. பிர்மாவும் காந்தத்தைத் தொடரும் இரும்பைப்போல் குடத்தைப் பின்பற்றிச்சென்றனர்.

இது இங்ஙனமாக கயிலாயத்திருந்த கண்ணுதற்பெருமான் ஓர் வேடரூபம் தாங்கி கணநாதர் யாவரும் பரிவாரங்க

ளாய்த் தொடர, உமாதேவியை விடைகொண்டுதென்றிசை நோக்கிச் செல்லுகையில், திருவிடைமருதூருக்குக் கீழ்பாரிசத்தில் வந்தவுடன் அமிர்தகுடத்தைக் கண்ணுற்றுப் பக்கத்தினின்ற சாஸ்தாவுக்குக்காட்டி இக்குடத்தை ஓரம்பால் சிதைத்து உள்ளிருக்கும் அமிர்தம் நாற்றிசையும் வழிந்தோடச்செய்வது நமது உத்தேசம் என்றனர். சாஸ்தாவும் தேவரீர் திருவுளப்படி உடனே உடனே ஆருகவென்று தனது தூணியினின்றும் ஓர் அம்பை எடுத்து ஐயனிடம் நீட்டினார். அப்பா இது அழியா மயகுடத்தை அழிக்கவல்ல அம்பு அன்று; அதன் உண்மை இதோ தெரியுமெனச்சொல்லி, அண்ணலும் வில்லைவளைத்துக் குணத்தொனிபண்ணி பாணத்தைப் பிரயோகிக்கவே, அது காற்றிலும் கடுக விசைந்தோடி அமுதகுடத்தில் தாக்கியும் அது அழியாதிருந்தமைகண்டு சாஸ்தாவும் தலைகுனிந்து நிற்க, ஐயன் சாஸ்தாவைத் தேற்றி அவ்விடத்திலேயே இருக்கசெய்தார். அந்தபாணம் தொடுத்த இடம் பாணுபுரம் எனவும் பாணுபுரி (பாணபுரேசம்) எனவும் அங்குண்டான லிங்கத்திற்கு பாணபுரீசர் எனவும் வழங்கலாயிற்று, இப்பால் ஐயன் சற்று மேற்கேசென்று பாணம் ஒன்றுதொடுக்க கலசத்தின் மூக்கையுடைத்து, அந்த கலசத்திற் யுடைந்தபாகம் ஆகாயத்தில் கிளம்பி அக்கினிமூலையில் சிறிதுதூரத்தில் விழுந்தது. அந்த இடம் குடவாயிலென்றும் அவ்விலிங்கத்திற்கு குண்டாலிங்கஙோணேசர் என்று பெயருண்டாயிற்று. பிறகு கலசம் இரண்டாகி முக்கட்பிரான் திருவருளால் நான்குதிசையிலும் வழிந்து ஐந்து குரோசனைதூரம் சென்று ஆறுய்பெருகி எழுந்த அமுர்தம் எண்டிசாமுகமும் சென்றது. குடத்திற்கு சம்மந்தப்பட்ட உறி, வில்வம், தேங்காய், பூணூல் எல்லாம் பல பக்கங்களில் சிதறபோய் விழுந்தது. அங்கங்கு அந்தபடி

பல லிங்கங்களாயிற்று, அதாவது உறி விழுந்த இடத்தில் (சிக்கம்—உறி) உண்டான லிங்கம் சிக்கேசர் எனவும், வில்வம்விழுந்த இடம் வில்லவனமாகி அவ்விடத்தில் வில்லவனேசர் எனவும் பாதாள லிங்கேசர் எனபெயரும் உண்டாயிற்று, (இதுநாகேசுவரன்கோவில்) தேங்காய் விழுந்த இடம் தேங்காய் அப்படியே பூமியில்பதிந்தது செவ்விலநீர் மரமாகி, அதனடியில் அக்காயின் குடுமிவடிவாக ஓர் சிவலிங்கம் உண்டாகி (நாளிகேரம்—தேங்காய்) நாளிகேரேசர் எனவும், பூணூல்விழுந்த இடம்லிங்கமாகி (யக்ஞோபவீதம்) பூணூல்-யக்ஞோபவீதேசர் என்றும் பெயர்பெற்று வழங்கலாயிற்று. பிறகு அக்கலசத்தின் தீர்த்தமானது வழிந்து போகவே, ஈசன் அமுர்தம்தங்க இடம்தர நினைக்கப் பூமி வெடித்து அவ்வாறே அமுர்தம் தங்க இடம்கொடுக்க இரண்டு அமுர்தவாவிகள் உண்டாயின. அந்த இரண்டு தீர்த்தங்களும் முறையே பொற்றாமரைதீர்த்தம் மகாமகதீர்த்தம் என விளங்கலாயிற்று.

கும்பத்தின்வாய் மேலேசென்று குடவாயில் ஆனதும் சொன்னோம்; கும்பத்தின் கோணம் இன்னதாயது எனத் தெரிந்து கொள்வது அவசியம், (கும்பத்தின் வாய்போக எஞ்சியதுகோணம்,) இது இருந்த இடத்திலேயே இருக்க, வேடரூபங்கொண்ட சிவபிரானைக்குடத்திற்குச் சமீபத்தில் சென்றவுடன், தண்ணீர்வடிந்து நல்லதரை யுண்டாயிற்று. உடனே அமுதத்தால் நனைந்த மண்ணைச் சேர்த்துப்பிடித்து ஓர் இலிங்கமாக்கி அவ்வுடைந்த குடமூக்கில் வைத்துத் தானே அவ்வமுதத்தால் அவ்விலிங்கத்தை மஞ்சனமாட்டிப் பூசித்துப் பிரமாவும் எல்லாத்தேவதைகளும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவ்விலிங்கத்துட் சென்று மறைந்து, சோதிமயமாய் விளங்கினார். உடனே தேவ

தைகளெல்லாம் உலகத்திற்கு மங்களத்தை யுண்டாக்க வேண்டிக், கைலாயத்தினின்றும் உமையை அவ்விலிங்கத திற்கு இடப்பாகத்தில் எழுந்தருளச்செய்து, பூஜித்து, மங் களநாயகியென அழைத்தார்கள். இவையெல்லாம் நடங் தது மாசிமாதத்தில், உடனே பிரமன் ஆதிகும்பேசருக்கும், மங்களநாயகிக்கும் ஆலயம் சமைத்து உற்சவம் செய்யத் தொடங்கி ஒன்பதுநாள்உற்சவம்செய்து பத்தாநாள் அமுத வாவியுள் அவபிருதஸ்நாடி மகாமகதீர்த்தத்தில் சுவாமியை தீர்த்தங்கொடுக்கச் செய்தான். இவ்விதமாக ஒவ்வொரு வருஷமும் பிர்மாஉற்சவம் நடத்துவதாக ஐதீகம்.

இந்தத்தலம் இவ்விலிங்கம் கும்பத்தில் தோன்றிய தால் கும்பேசர் பிரமசிருட்டிக்கு முற்பட்டதால் ஆதி கும் பேசர், அமுதகும்பத்தில் உற்பவித்ததால் அமுத கும்பே சர் எனப் பலகாரண நாமம் பூண்டுள்ளவர்.

(இத்தலத்தை வம்பிரானே பூசித்து லிங்கத்துட் கலந் தனர் என்று மெமேல கூறினோம். இங்ஙனம் நிகழ்ந்து தன் னைப்போல் ஒரு மனப்பட்டவராய்ப் பூசிப்பவருக்கு அரிய சாயுச்சியப்பதவி யளிப்பனென்பது குறிப்பின் வெளிப் படுத்தலேயாம்) பின்னர் பிரமதேவரும் விதிப்படி பூசித் துத்துதித்து வேண்டிய வரங்கள் பெற்றனர், (பூசாவிதி தெரிந்துகொள்ள வேண்டியவர்கள் புராணத்தின் பிரமன் பூசை புரிபடலத்தைப்பார்க்க, விதியினால் ஏற்பட்ட விதிக ளாதலால் அவ்விதிகள் அரிய விதிகளே! அவர்செய்த துதி யின் அருமை அற்புதம்!! அற்புதம் !!!

பிரமனாகி யான் படைத்தற்கும், விட்டுணுவாகி அவன் புரத்தற்கும், உருத்திரனாகி உவன் அழித்தற்கும், எவன ருள் முதற் காரணமாயுள்ளதோ அவனே குடமூக்கமருமா கும்பேசன் அவனடியை யான் பணிவேன்.

இருக்கு, எசுர், சாமம் எனும் மூன்று வேதத்திற்கு நடுவேதம் ஏழுகாண்ட முடையது, அக்காண்டங்களுள் நடுவாகிய நாலாங்காண்டம் ஏழுபாகமுடையது. அவ்வேழு பாகத்தில் நடுவாகிய நாலாம்பாகத்தின் நடு மனுவிற்குரியவனாகிய கும்பேசனைத் தொழுவேன்.

காலாக்கினிருத்திரம், சாபாலம் முதலிய உபநிஷத்துக்களில் விஸ்வன், விஸ்வசேவியன், அரிகேசன், புட்டிவருத்தனன், சம்பு, உருத்திரன், ஈசன், மாதேவன் எனும் பெயர் படைத்துள்ள கும்பேசனைப் பணிவேன்,

"பற்கன்" என்னும் பெயரால், காயத்திரியில் குறிப்பால் உணர்த்தப்படுவோன் சிவனே, ஆதலின் அந்தணர் வழிபடும் பொருளாயுள்ளவன் அவனே. அச்சிவக்குறியாகிய கும்பேசனை யான் தொழுவேன்,

பிறவாதிருக்க வேண்டுவோர் யாவரும் பிறப்பிலியாகிய கும்பேசனைத்தொழுக.

காலகண்டம் கடக்கக்கருதுவோர் யாவரும் காலகாலனாகிய கும்பேசனைத்தொழுக.

மாதர் மயக்கிலகப்படாதிருக்க வேண்டுவோர் காமாரியாகிய கும்பேசனைத்தொழுக.

குற்றமெல்லாம் குணமாகக்கொள்பவன் கும்பேசனே என்பதற்கு அவர் நீலகண்டப்பெயரும், மெலியாரைக் காக்கும் வித்தகன் என்பதற்குச் சந்திரசேகரப்பெயரும், தாய் போலும் தயையுடையான் என்பதற்கு அர்த்தநாரீசப்பெயரும், விசனத்தைத்தீர்த்துச் சந்தோஷத்தைத் தரவல்லவன் என்பதற்குச் சங்கரப்பெயரும், அவர் பிரணவப்பொருள் என்பதற்குக் கொன்றை வேந்தப்பெயரும், தேவர்க்கு மேலான தேவன் என்பதற்கு மகாதேவப்பெயரும், மூவரில்



கும்பகோணம் மகா மாம்மாங்கக்குளம்.

என்னை இவ்வண்ணம் செய்யென்றால், எவ்வண்ணம் முடியும் என, அய்யன் கேட்டு அது சரிதான் இதோ இருக்கின்ற பொய்கையின் மூழ்கிபோ என்றனர். மூழ்கிய முனிவர் காவிரி நதியில் காசிப தீர்த்தத்தி லெழுந்தனர். (ஆற்றி லிட்டுக் குளத்தில் எடுத்தவர்க்கு, குளத்திலிறக்கி ஆற்றி லெழுப்புவதும் சகஜமே) எழுந்த முனிவர் முன்னின்றவரைக் காணாது கலங்கி அங்கின்றவரை இத்தலம் யாதென வினவ, கும்பகோணம் எனக்கேட்டு எம்பிரான் திருவருளை வியந்து புகழ்ந்து, திருநீறு தரித்து, கண்மணிபூண்டு "சிவாயநம" வெனச் செபித்து, கும்பேசம் சேர்ந்து கும்பநாதரைப்பூசித்து, கூவிளவனேசராதியரைப் பணிந்து, மீட்டும் கும்பேசமடைந்து, கும்பிட்டு நின்று, எம்பெருமானே! கயிலையங்கிரியின் உமாபாகக் காட்சி தரவேண்டும் என வேண்ட, வேண்டிய முனிவரைக் காவிரிக்கு வடபால் உள்ள சண்பக வனத்தில் தன்னருளாற் சேர்ப்பித்து கைலாயம் ஒன்று தோற்றி அதன் மேல் கோபுரம், மதில், விமானம் யாவும் கண்டு அத்தாணி மண்டப மத்தியில் வச்சிர சிம்மாசனத்தின்மீது வாத்திய முழங்க, மாகதர் கட்டியங்கூற, பணிப்பெண்கள் கவரிவீசி விசிறியசைப்ப, பூதகணங்கள் புகழ்பாடத், தேவர்கணத்தின் துதிநீட,முனிவர் குழாங்கள் தொழுதாட, மனிதர் யாரும் மகிழ்கூட பார்வதிதேவியர் பங்கமர, வேதாதீதர் வெண்குடை நீழலில், பவளமலையென வீற்றிருந்தனர். இந்நலங்கண்ட பிப்பிலாதரும், ஆடிப்பாடி, ஆனந்தபரவசமாய், இறுதியில் பேரின்ப வீட்டைப் பெற்று மகிழ்ந்தனர். எமது அண்ணலும், இக்கோலம் நீங்கி எக்காலும் உள்ள இலிங்கரூபம் தாங்கி கயிலாசநாதரெனும் காரணப்பேர் பூண்டின்னும் ஈண்டு எழுந்தருளியிருக்கின்றனர். இம்மூர்த்தியை அன்புடன் சேவிப்போர் இன்பவீடடைவர்.

---

# மாலதிவனேசர்,



உதயகிரியில் ஓர் அந்தணர் இருந்தனர். அவர்வேதத்தில் நிபுணர், பிறைசூடிய பெம்மானிடம் பேரன்புடையவர், நிசாகரன என்னும் நாமம் பூண்டவர். இவருக்கு தூமகேது என்றோர் புத்திரன். விபூதியிடத்து மிகுந்த பக்தியுள்ளவர். இவர் முத்திக்குரிய தலம் இத்தலத்தில்யாதென விசாரித்து கும்பகோணமெனச் சொலக்கேட்டு, தமநிடம் கற்போர் சூழ, இப்பதிபுகுந்து, மாகமீராடி, ஆதிகும்பேசரைத் தரிசித்து, கும்பேசத்துக்கு நிருதி திக்கில் வசிக்க எண்ணிச் சென்ற காலையில், மாலதிவனம் ஒன்றிருக்கக் கண்டு, அதைச் சுற்றிப்பார்க்க, சிவகுறி ஒன்று கண்டு தெண்டனிட்டுப் பூசை செய்யும் நேயங்கொண்டு நீராட இடந்தேட வருண தீர்த்தம் வழியில் தென்பட்டது; அதைப் புதுப்பித்து அதில் மூழ்கிப் புனிதமெய்தி, அந்நீர்கொண்டு, அண்ணலையாட்டி, அலர்களைச்சூட்டிப், பூசை புரிந்தனர் இந்நாள்போலப் பன்னாள் பூசிக்க, எம்பிரான் தேவியாருடன் இடபாரூடராய்க் காட்சியருள அந்தணன்.

ஐயனே யருளாளனே பழுக்
கையனே நுதற் கண்ணனே துதி
மெய்யனே புகழ் வேதனே புவி
வையனே யென வாழ்த்தி யேத்தினன்.

வேண்டிய தியாதென அண்ணல் கேட்டருள உமது காட்சியிற் சிறந்தது வேறொன்று வேண்டுதற் கில்லையாயினும், உலகோருய்யும் வண்ணம் இவ்வரம் வேண்டுவன்.

1. நீர் வனத்திலிருந்த குறியிடத்தும் அமர்ந்திருந்த காரணத்தால் விசுவநாதப்பேர் பெறவேண்டும்.

2. கண்டார் களிப்புறும் திருமேனியாதலின் அம்மை ஆனந்தவல்லிப் பேர் பூணவேண்டும்.

3. யான் புகுந்த இவ்வாருணதீர்த்தம் என் பேரா லாக வேண்டும்.

4. இத்தலத்திற்கு அபிஷேக, நிவேதனங்களுக்கும் ஆபரணாதிகளுக்கும் உதவி புரிவோர் மண்ணுலகில் மகப்பேறு முதலிய செல்வம்பெற்று விண்ணுலகில், எப்போகமும் துய்த்து, பின்னர் சிவலோகஞ் செல்வாராக வேண்டும் என, அவ்வண்ணம் அளித்து அந் தர்த்தானமாயினர்.

பங்குனிப் பூரணையில் இடபலக்கினத்தில் இந்நீராடத் தகும்.

---

உ

கணபதி துணை.

# மகாமக தீர்த்த மகிமை.



உமையொருபாகங்கொண்ட வுத்தமன்சொரூபமேய
யமைதரநெடுந்தூரத்தே யமர்ந்துளத்தெண்ணினாலு
மிமைநொடியளவிற் பாவமனைத்தையுமிரிப்பதாயொண
கமைதருமகதீர்த்தம்போற் புவனத்துட்காண்பதின்றே.

பிரமதேவர் கும்பேசருக்கு ஒன்பதுநாள் உற்சவம் நடத்தியபின்னர், பத்தாம்நாள் அவபிருத ஸ்நானம் நடத்தி உற்சவத்தைப் பூர்த்திசெய்த விஷயம் ஈண்டுகூறப்படும். (அவபிருதம்-முடிவு; இங்கு உற்சவ முடிவின் நீராட்டு.)

அமுதகுடத்தினின்றும் வழிந்தோடிய அமுதம் தேங்கி இரண்டு தீர்த்தமாயின. அவற்றில் ஒன்று மகதீர்த்தம் ஆயது என்று முன்னர்க் கூறினோமல்லவா? அந்த அமுத வாவியாகிய மகதீர்த்தக் கரையைப் பிரமதேவர் அலங்கரித்து வீதிபுதுக்கி முத்துப் பந்தரமைத்தனர். இப்பால் எம்பிரான் இடபாரூடராய் எழுந்தருள, பிராட்டியார் பிள்ளையார் தத்தம் வாகனத்தைக்கொண்டு பின்னும் முன்னும் செல்ல, சோமேசராதியோர் தொடர்ந்துவர, மகதீர்த்தம் வலம்வந்து ஆங்காங்கமைத்துள்ள காவணத்தில் அவரவர் அமர, கும்பநாதர்மட்டும் கங்கை தீர்த்தத்திற்கு எதிரில் அம்பொன்னாலிலகிய மணிமண்டபத்திற் றங்கியருளினர். அப்பால் பிரமதேவர் அத்திரதேவரை விதிப்படி அர்ச்சித்து உத்தமதீர்த்தத்தில் ஆட்டிததானுமாடினர், தேவருமாடினர் யாவருமாடினர், பிரமதேவர் ஆங்கு தம்பேரால் ஓர் தீர்த்தம் கண்டனர். திக்குபாலகர் எண்மரும் நதிகன்னியர் ஒன்பதின்மரும் தத்தம் பேரால் ஒவ்வோர் தீர்த்தம் கண்டனர். தேவர், கின்னரர், கிம்புருடர், கந்தருவர், சித்தர், வித்தியாதரர், சாரணர், முனிவராதியோர் கண்ட தீர்த்தமும் பலவாம். ஆகவே மகதீர்த்தத்தில் உள்ளன் பிரமதீர்த்தம் ஒன்று, திக்குப்பாலகர் தீர்த்தம் எட்டு, கன்னியர் தீர்த்தம் ஒன்பது, தேவராதியர் தீர்த்தம் அறுபத்தாறுகோடி. இத்தீர்த்தங்கள் இருக்குமிடம் விவரம் இதனடியிற் காண்க:—

1. அபிமுகேசர் சந்நிதி முதல் நாற்கரையின் நடுவும், கோணங்களும் வலவாக வர முறையே இந்திரன், அக்கினி,

இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய திக்கிப்பாலகர் தீர்த்தம் இருக்கும் இடங்களாம்.

2. வாயுதீர்த்தம் குபேரதீர்த்தம் இரண்டிற்கும் சரி மத்தில் பிரமதீர்த்தம்.

3. வாயுதீர்த்தம் முதல் வாயுதீர்த்தம் வரையில் வலங் கொண்டுவர பிரமதீர்த்தம் உள்ளிட்ட என்பது தீர்த்தங் களுக்கும் இரண்டிரண்டின் மத்தியில் ஒவ்வோர் கன்னியர் தீர்த்தம் உற்றுள்ளன; அவை வருமாறு; கங்கை, யமுனை, கோதாவிரி, நருமதை, சரஸ்வதி, காவிரி, குமரி, பயோட் டிணி, சரயு.

4. முற்கூறிய பதினெட்டும் கரையோரத்தில் பொ ருந்தி நிற்க தேவராதியர் அறுபத்தாறுகோடி தீர்த்தமும் மத் தியில் உற்றிருக்கின்றன.

---

## இத்தீர்த்தங்களில் ஆடியவர்கள் எய்தும் பலன்களாவன:—

| தீர்த்தம். | பலன் விவரம். |
|---|---|
| 1. இந்திரதீர்த்தம் | சொர்க்கமுறல். |
| 2. அக்கினிதீர்த்தம் | பாபநாசம். |
| 3. யமதீர்த்தம் | யமதண்டநிவர்த்தி. |
| 4. நிருதிதீர்த்தம் | பூத, பிரேத; பைசாசபீடை நிவர்த்தி. |
| 5. வருணதீர்த்தம் | புத்தி முத்திப்பேறு. |
| 6. வாயுதீர்த்தம் | துன்பநிவர்த்தி. |
| 7. குபேரதீர்த்தம் | சங்கநிதி பதுமநிதி. |
| 8. ஈசானதீர்த்தம் | பாவநாசமும், சிந்தித மனோரத சித்தியும். |
| 9 பிரமதீர்த்தம் | மகத்தில் நூற்றொரு தலைமுறை ஈடேறல். மகாமகத்தல் 300-கோடி தலைமுறை ஈடேறல். |
| 10. கங்கை | மகத்தில் கைலை சித்தித்தல். மாமகத்தில் பதினாயிர கங்காஸ்நானபலனும் சாயுசசிய பதவியுமுறல். |
| 11. யமுனை | பொன்பேறு. |
| 12. கோதாவிரி | காம்யார்த்த சித்தி |
| 13. நருமதை | பாபநாசம். |
| 14 சரஸ்வதி | மெய்ஞானமும், வைராக்கியமுமுறல். |
| 15. காவிரி | மானஸபாவ நிவர்த்தி, காம்யார்த்த சித்தி. |
| 16. குமரி | பதினாயிர அஸ்வமேத பலசித்தி. |
| 17. பயோட்டிணி | காமதேனுவுடன் கூடிவாழும் வாழ்வு. |
| 18. சாயு | கலிகஷ்ட நிவர்த்தி. |
| 19. அறுபத்தாறுகோடி தீர்த்தம். | உலகத்தில் தீர்த்தமென்று பேர் பெற்றுள்ளன வற்றாடிப்பெறும் பயன் அனைத்தும் ஒருங்கே பெறல். |

இத்தகைய தீர்த்தங்கள் அமைந்துள்ள மகதீர்த்தத்-

திற்கு மாமகதீர்த்தம், கன்னிதீர்த்தம், பாபநாசதீர்த்தம் அமுததீர்த்தம் என்னும் பிரதிநாமங்களுண்டு.

1. இம்மகதீர்த்தத்தை ஒருதரம் வலம் வந்தால் பூமியை நூறுதரம் வலம் வந்ததொக்கும்.
2. இதை ஒருதரம் நமஸ்கரித்தல் சிவபெருமானையென்றும் இடைவிடாது நமஸ்கரித்ததாகும்.
3. இதில் ஒருதரம் ஆசமனம்செய்ய மேருவொத்த பாவமும் தீரும். தசையால் எலும்பால் மயிரால் தோலால் உண்டாய பாவம் பறக்கும். கோடி ஜன்மத்தை ஈடேற்றும்.
4. ஒருதரம் மூழ்கினால் வேதமோதல், யாகமியற்றல், முதலியவற்றை விட்ட மாபாவியும் கரையேறி முக்தனுவன். (ஆசாரம் குறைந்த பிராமணன் என்பது கருத்து.)
5. ஸ்நானம் செய்ய நினைத்தாலும், தனதனைவிடத் தனிகனுவன்.
6 மாமகதினத்தில் மேற்கூறியவற்றைச் செய்தால் கூறிய பலனிற் கோடி மடங்குறலாம்.
7. விதியறியாத * சிதடன் மூழ்கினும் புனியாளும் பதியாவன்.
8. விதியறிந்து மூழ்கில் கங்கைக் கரையில் நூறு வருஷம் தங்கி விதிப்படி மூழ்கிய பலன் கிடைக்கும். புத்திரப்பெறு முதல் எத்தரப்பேறும் உறும்.
9. சந்ததிவேண்டி, ஐந்து மகம் மூழ்கில் தீர்க்காயுளுள்ள மைந்தனை யடையலாம்; மாமகத்தில் மூழ்கினால, சுப்பிரமணியனே சுதனுக வருவன்.

* அறிவில்லான்; குருடன்.

10. மகதீர்த்தத்தில் விதிப்படி மூழ்கி, சிவபெருமானைத் தரிசித்தால் சிவசாரூப்பியமுறும்.

11. உற்சவகாலத்தில் ஆடிற்பிரமனுவன்; தீர்த்தவாரியில் மூழ்கில சிவசாயுச்சிய மடைவன்.

12. மாகப்பூரணையில் விதிப்படி நானுதானுதிகள் பண்ணினுல் ஏழுகுலமும் கரையேற்றும்.
ஏழுகுலமாவன:— தன்குலம், தான் பெண்கொண்ட குலம், தன்னுடன் பிறந்தாள் குலம் தந்தையுடன் பிறந்தாள் குலம், தாயுடன் பிறந்தாள் குலம், அவளுடன் பிறந்தான் குலம்; தன்பெண் கொண்டான்குலம், என்பனவாம்.

13. மாமகப்பூரணையில் மூழ்கில நூற்றெருரு குலம் ஈடேறும். நூற்றெருரு குலமாவன:— மேற் கூறிய ஏழுகுலத்தை மாதுவர்க்கம் பிதிர்வர்க்கம் என இரட்டிக்க வரும் பதினுன்கிற்கும் ஒவ்வொன்றிற்கு எவ்வேழாகத் தோன்றுவன தொண்ணூற்றெட்டு இவற்றுடன் அரசன், ஆசான், மித்திரன் ஆகிய முக்குலமும் கூட்டப்பெறுவன நூற்றெருன்றும்:

மாமகமாவது சிங்கராசியில் குரு இருக்கும் வருடத்தில் வரும் மாசிமகம். இவ்வருடத்தில் கங்கை முதலிய தீர்த்தமும், பிரமன் முதலிய தேவர்களும், சாகருகையர்களாய்,- அஞ்சலி யஸ்தராய் கும்பகோணத்தில் மகதீர்த்தத்திலும், மாதேவ ராலயத்திலும் வசிப்பர்கள். ஆதலால் இவ்வருடத்தில் இத்தீர்த்தயாத்திரை ஒன்றே செயல் தகும். மற்றவை செய்யில் அதனுல்வரும் பலனில்லை. விவாகம், சௌளம், உபநயனம் முதலியவை செய்யவொண்ணுது. மாமக ஸ்நா

ணம் செய்யாதவர்களுக்கு இதுகாறும் செய்த புண்ணிய மனைத்தும் போய்விடும்.

மறையவர், குரு, பிதா, ஈஸ்வரன், இவர்கள் விஷய மாய்ச் செய்த பாதகங்கள், சிவசொத்தை அபகரித்தல், சிவ தருமம் சிதைத்தல், சிவாலயத்தில் தகாதன செய்தல், சிவ பூசைசெய்யும் மறையவரை இகழ்தல், ருத்திராக்ஷம் முத லிய சிவசாஸனங்களை விற்றல், அவற்றைத் திருடல், அரசு வில்வங்களை யழித்தல், வாக்குத்தத்தம் பிறழல், துஷ்டரோடு சேருதல், சிவலிங்கத்தைத் திருடல், கன்னிகையை விற்றல், அவர்களைத் திருடல், பசுவை வருத்தல், சிநேகனுக்கு விரோ தம் செய்தல், கருவை யழித்தல், காவினை யழித்தல், சர்ப் பத்தைத் தடிகொண்டடித்தல், சூதாடியுண்டல், இழிஞர் பால் கைகட்டி ஏவல்செய்தல், கொலைசெய்து கூலிகொண் டுண்ணல், சிவனடியாரை அவமதித்தல், அவர் பொருள் கொள்ளல், அவர்க்கிடர் புரிதல், அவர் பசித்திருக்கத் தா னுண்ணல், கன்றுக்குப்பால்விடாது கறத்தல், காரியமாக வேண்டிய காலத்துச் சிநேகித்து காரியமுடிந்தபின் கை விடல், சூரியன் உதித்தபின் மாதரோடு முயங்கல், சிரார்த்த தினத்தில் சம்போகித்தல், பெற்றவர் பசித்திருக்கத் தானுண் ணல், பிதிர்சிரார்த்தம் இகத்தல், பெரியவர் கொடுக்கும் திரு நீற்றை ஒருகையால் வாங்கல், கற்புடையவர்க்குக் குற்றங் கற்பித்தல், பஞ்சம் வரவேண்டுமென்று பிரார்த்தித்தல், பொ ருளைத்தேடிப் புதைத்து வைத்தல், தன் தாரமல்லாரைப் புணருதல், ஆகிய இப்பாதகங்கள் மாமகதினத்தில் மகதீர்த் தத்தில் விதிப்படி ஒருதரம் மூழ்கில் தீயின் நேர்பட்ட பஞ் சௌப்பறக்கும். இத்தீர்த்தத்தில் தினம்தினம் மூழ்குதல் உத்தமம். முடியாவிடில் சித்திரை, கார்த்திகை, மாசி இம் மூன்று மாதங்களில் மூழ்குதல் நலம். இது முடியாவிடில்

மாசியிலேனும் மூழ்குதல் போதும். அதுவும் முடியாவிடின், மாசி மகத்திலேனும் மூழ்குதல்வேண்டும். அதுவும் முடியாவிடில் மாமகத்திலாயினும் ஆடல் வேண்டும். பலகாரணத்தால் இதுவும் முடியாவிடில் கும்பகோணமிருக்கும் திக்கை நோக்கி பூசித்துத் தீர்த்தத்தைத்தியானித்து இருத்தல் வேண்டும். இதுவும் முடியாதென்றால் இதற்குமேல் விதிசொல்ல எம்மால் முடியாவாம். தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணும் பருவ காலங்களாவன அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிறப்பு, இரண்டயன புண்யகாலம், கிரகண புண்யகாலம், சுக்கிரவாரம், மகாவிதீபாதம், கார்த்திகை, கயசசாயை துரங்கச்சாயை,—பஞ்சம ஜாதியர்களினதும், மாதவிடாய் வந்தவள் நிழலும் உற்றகாலம், சிவராத்திரி ஆகிய இவைகளே.

விதிப்படி என்னு மேலே குறிப்பிட்ட விதிகள் ஸ்நான விதி, தானவிதி என இருவகை. ஸ்நானவிதிகளாவன:—தூர தேசத்துள்ளவர்கள் யாத்திரை எத்தனிக்குமுன் நித்திய, கிருத்தியம் நிரப்பி புண்யாவசனம் செய்து, அந்நீரைப் புரோக்ஷித்து ஆசமனம் செய்து, பஞ்சகவ்யம் உண்டு, பிராமணர்க்கன்னமிட்டு, கோடி கொடுத்துக் குருவை வணங்கி, அனுக்ஞைபெற்று பெண்டு பிள்ளைகளுடன், புறப்பட்டு, வாகனமின்றி காலால் நடந்து, கும்பகோணத்தைக் குறித்துச்செல்லுகையில், அத்தலபுராண சிரவணம் செய்துகொண்டு இனிய உணவு, தாம்பூலம், சௌளம், சம்போகம் நீக்கி, நல்லாரோடு கூடி, இரவில் உண்ணுமல், பழையது, பக்ஷணம், தன்னிலும் தாழ்ந்தோர் உண்டசேடம் தள்ளி, உதய நீராடி குருபூசைபண்ணி, உச்சிநீராடி சிவபூஜைசெய்து, ஐந்தெழுத்தோதிச் செல்லும் நியமம் பூண்டு கும்பகோணத்தை அடைந்து, கும்பேசராதியரைப்பணிந்து, மகதீர்த்தக் கரை சேர்ந்து தீர்த்தத்துள் அதிர்ஷ்டித்து இருக்கும் தேவர்

களை வணங்கி சங்கற்பித்து அநுக்ஞைபெற்று பழம், புஷ்பம், செங்குங்குமம், தாம்பூலம், எலுமிச்சம்பழம் காதோலை, கருமணி, கைவளை, ரவிக்கைகளை ஒருமுறத்தின்மேல் வைத்து மற்றொரு முறத்தால் மறைத்து (மறைக்காவிடில் பலன் குறையும்.) சுமுகமுள்ள சுமங்கலை கையிற்கொடுத்துவிட்டு, கங்கையின் இட்டத்தையடைந்து தீர்த்த பூசையெய்து, காதோலை கருமணி முதலியவைகளை தீர்த்தத்தில் விட்டு, ஸ்நானம்பண்ணி, பிதிரர்க்குத் தர்ப்பணம் விதிப்படிசெய்து, மடியுடுத்து, விபூதியை உத்தூளனம்பண்ணி, திரிபுண்டரமாகவும் மேலிட்டு, ஐந்தெழுத்தோதி, வடகரை அரசை வலம் வந்து அம்மரத்தடியில செம்மையாய் உட்கார்ந்து, நதிகன்னிகளை அருச்சித்து, காதோலை கருமணி முதலிய சார்த்தி, பிராமணர்க்கு அறுசுவையுணவை உறுசுவையோடளித்து, தாம்பூல தக்ஷிணை கொடுத்து, பின்னும் கும்பேசராதியரைத் தொழுது, பசியாறும்படி பந்துமித்திரருடன் புசித்து பாயிற் படுக்காது இருத்தல் வேண்டும்.

தன்னூருக்குத் திரும்புநாளில் கண்டம் மட்டும் சௌளம் செய்துகொண்டு, ஸ்நானம்செய்து, இரணியசிராத்தம் செய்து, அன்றிரவு உண்டிகொள்ளாது இருந்து, மறுநாள் விதிப்படி சிரார்த்தம் செய்து, ஸ்தலத்தை விட்டுப்புறப்பட்டுத் தன் இருப்பிடம் சேர்ந்து, பிராமணர்க்கன்னமிட்டு, அவர் ஆசிபெற்று யாத்திரை நியமம் நீங்கி கிரக ஆச்சிரம நியமம் தாங்கி மகிழ்வதே ஸ்நானவிதிகளாம்.

---

## தான விதிகளாவன



விதிப்படி ஸ்நானம் செய்து புனிதராகிய பின் பரசிவ பக்தியிற் சிறந்த பிராமணரை வருத்தி, ஆசனத்திருத்தி, அருக்கியமளித்து, சந்தனபுஷ்பம் தரித்து பசு, கன்னிகை, பொன், ரத்தினம், குடை, வஸ்திரம், பூணூல், குதிரை, பணிப்பெண், இடபம், தானியம், விபூதி, சந்தனம், பால், அன்னம், பாயசம், இனியகனிகள், தாம்பூலம், முதலியன மறைவிடைத்து வழங்கவேண்டும்.

கோதுமையைப்பரப்பி, அதன்மேற் பழங்களைக் கொட்டி வஸ்திரத்தால் மூடிக்கொடுக்கவேண்டும்.

யானை, எருமைக்கடா, பிடரிசாயாத கொம்புள்ளதும் மயிர் செறிந்ததுமான வெள்ளாட்டுக்கடா, இவைகளைக் கொடுத்தல் வேண்டும் (இவை அபமிருததானம் என்பார்கள்.)

காலபுருஷதானம் செய்யவேண்டும். (காலபுருஷதானமாவது கறுப்புக்கம்பிளியால் புருஷாகிருதிசெய்து எள்ளும் பொன்னும் கலந்தடைத்து, இடதுகையில் விளக்கும், வலதுகையில் கத்தியுங்கொடுத்து, இருட்டு வீட்டில் வைத்து, பிராமணரையழைத்து பசும்பொன் நிறையக்கொடுத்து இவ்வுருவைத்தானம் செய்தலேயாம்: இது காலமிருத்யு திருப்திக்காகச்செய்வது.)

### இருமுகச்சுரபிதானம் செய்யவேண்டும்.

இருமுகச் சுரபி-அப்போது ஈன்று கொண்டிருக்கும் பசு. பசுவின் அந்த ஈற்று முழுப்பலனையும் பிராமணன் அடையவேண்டி இந்தத்தானம் செய்வது போலும். இது

நிற்க! முக்கியமாக நஞ்சிவநேசச செல்வர்களணியவேண்டிய சின்னங்கள் விபூதி, உருத்திராக்கமும், செபிக்கவேண்டியது, ஸ்ரீபஞ்சாக்கரமுமாம். விபூதி யென்னும் சொல்லுக்கு, வி-விசேடம் பூதி-செல்வமெனினும் பொருந்தும்; இஃதன்றி, திருநீறெனவும், இரட்சையெனவும், இன்னும், பலதிருநாமங்களுள; திருநீறென்பது இறுதிகாலத்தில சர்வத்தையும் நீறுக்கி, தன்றிருமேனியிற் றரிப்பதினால் திருநீறென்றும், சகலத்தையுங்காத்து ரட்சிக்கப்படுவதினால், இரட்சையென்றும், பொருந்தும்; இத்தகைய, விபூதியானது, மூன்று விதமாகும்; அவைவருமாறு, கற்பம், உபகற்பம், அநுகற்பமென்பதே! கற்பவிதியாவது, தலையீற்றுப்பசுவை, சுத்தமாகியவிடத்திலமைத்து, சுத்தமாகிய, ஆகாரமீந்து சுத்தமாகிய, ஆகாரமீந்து சுத்தமாகிய விடத்திற்கட்டி, சாணம்போடுகையில், கீழேவிழாவண்ணம், தாமரையிலையில வாங்கி மேலுள்ளமழுவை நீக்கி, சுத்தமானவிடத்திற்போட்டு, கோசலம விட்டுபிசைந்து வடைதட்டியுலரசசெய்து, காய்ந்த பின்னர், நெற்பதரிலிட்டு அக்கினியிற் புடம்போட்டெடுப்பதே; உபகற்பவிதியாவது, சிவாலய மடப்பள்ளியிலுள்ள சாம்பரை முற்கூறியவண்ணம், தலையீற்று பசுவின் கோசலம் விட்டுப்பிசைந்து மேறகூறிய வண்ணம் செய்வதாம். அநுகற்பவிதியாவது, காட்டின்கண் தானுயுலர்ந்த சாணத்தைக் கொண்டுவந்து மேற்கூறிய முறையாயச செய்யப்படுவதே; மேஷ தலையீற்றுப்பசுவானது, சாணம் போடுங்காலத்திற் காத்திருந்து கீழே விழாமற்றாமரை இலையில் வாங்குங் காலத்திலும், அஃதை கோசலம் விட்டுப்பிசையுங் காலத்திலும், வடையாகத்தட்டுகின்ற வேளையிலும், உலர்த்துங்காலத்தும் அக்கினியிலிடுங்காலத்தும், ஸ்ரீபஞ்சாக்கரத்தை, அதிபய பக்தி விசுவாசத்துடன் செபித்து தூபதீபஞ்செய்து வெடுத்

தும், அஃதில் சுத்த வெண்மையாயிருந்தாலல்லது, கையி னாற்றீண்டுதல் கூடாவாம்; செந்நிறம், பொன்னிறம், கரு நிறம், புகை நிறமுள்ள விபூதியை நீத்து, சுத்த தவளநிறமா யுள்ளவிபூதியை யெடுத்து மட்பாண்டத்தில், புதியவெள்ளை வஸ்திரத்தினால் வடிக்தெடுத்து சுகந்த புட்பங்களைக்கலந்து, முன்னர், சிவபெருமானுக்கு அபிடேகஞ்செய்வித்து, பின் னர், புதிய மட்பாண்டம், வில்வக்குடுக்கை, சுரக்குடுக்கை, பட்டுப்பை, செம்புடம், இதுகளிலடைத்துவைப்பதாம், சிவ னடியார்கள், எக்காலத்தும், உத்தூளனமாகவும், சைவம், விசேடம், நிர்வாணதீட்சைப் பெற்றவர்கள் மாத்திரம் சந்தி யாகாலமூன்றினும், திரிபுண்டரமாகக் குழைத்துமிடுவர்கள். (ஊர்த்வபுண்ட்ரம் ம்ருதா காரியம் பஸ்மனா த்ரிபுண்ட்ரகா) விபூதியை, சூலம் போலவும், பொட்டாகவும், கம்பியாகவும், ஓர் விரற்கொண்டும், நெற்றியிற்றரிக்கலாகா; அவ்வண்ணந் தரிக்கில் நூறுபசுவைக்கொன்ற தோஷம் கிடைக்கும். தரிக் கின்ற காலத்திற்தவறி கீழேவிழுமாயின், அவ்விடத்தை யக் கணமே சுத்தஞ்செய்தல்வேண்டும். விபூதி தரிகின்ற முறை; விபூதியை யெடுத்து அண்ணாந்து, சிவசிவ வென்று உள்ளுரு கக்கசிந்து கீழே விழாத வண்ணம், இரண்டு புஜத்தின்மீது ஒழுகத்தரித்தல்வேண்டும், "நமசிவாய வென்றிடுநீறே" என ஆன்றோர் கூறியிருக்கின்றனர். இத்தகைய திருநீற்றை "நஞ் சை வசமயகோளரி" யாகிய "திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்" மதுரையிடத்து, அமணரைவாதில் வெல்லப் புகுங்காலத்து, கூன் பாண்டியனுக்குற்ற, வெப்பநோயை நிவர்த்தித்ததும் இத்திரு நீறேயாம் ஆதலால் அடியிற்கூறி யதற்கு. (திருநீற்றுப்பதிகம்) எனப் பெயர்பெற்றது அவை வருமாறு.

மந்திரமாவது நீறு வானவர் மேலதுநீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான்திருநீறே.

என்வோதி வெப்ப நோயைதவிர்த்தனரன்றோ? இக்காலத்தும், யாவர்க்காயினும் விடாமலடிக்கின்ற, சுரநோய்க்கும், மேற்கூறிய திருநீற்றுப்பதிகம் பதினொன்றையும் உள்ளன்போடு வோதி, விபூதி அளிக்கிலச்சுரம், 5-நிமிஷத்திற் றீருமென்பதற் கையமேயில்லை. இப்பதிகம் 11-ம் தேவார அடங்கன் முறையிற் கண்டுகொள்க! இனி யுருத்திராக்கத்தின் பெருமையை சிஞ்சிற்று கூறுவாம்.

உருத்திராக்கமென்பது:— உருத்திரனுடைய நேத்திரம்; இஃது தோன்றிய வரலாறு; முற்காலத்திற் றக்கன் வேள்வி, யியற்றிய போது அவ்வேள்வியை யழிக்கவேண்டி, ஸ்ரீகணநாதரையும், ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளையுமேவ, அவர்களாங்கு சென்று தக்கனால் ஏற்படுத்திய, பலவித கனிகள், சுண்டல், மோதகத்தைப்புசித்துக்கொண்டு ஸ்ரீகணநாதரும், திவ்யமானபந்தரின் கண்ணமர்ந்துள்ள, ஆடல், பாடல்களில் மகிழ்ச்சியுற்று ஸ்ரீமுருகக்கடவுளுமிருந்தாராகலின் அத்தருவாயில், நம்மீசன் சினங்கொண்டபோதி லவரது, திருநேத்திரங்களினின்று திவலைதிவலையாக நிவர்த்துளிகள் சிந்தியதாம். அந்நீர்த் துளிதான் உலகத்தடத்திற் சிதறி விருட்சமாயது. அம்மரத்தினின்று, பூர்த்து, காய்த்து பழுத்ததே உருத்திராக்கமாயது. அஃதில், ஒன்று முதல், 18-முகம் வரையிலுமுள்ளது; ஒருமுகத்திற்கு, விலை கிடையாவாம். இரண்டு முதல் 6-வரையில் உசிதம், அதற்கு மேல் 7-முதல் 10-வரையில் அதியுசிதம், 11-முதல் 18-வரையில் மிக்க

வுசிதமாம். இதற்கேறுமுகமென்னும் செல்லுவாருமுளர். இவைதில் சிரசுமுதல், கண்டம், கரம் இவைகட்கு இத்தனை யித்தனை யணியவேண்டியதென்பது சாத்திரத்தின்றுணிபு. எவ்விடத்தணியினும் – தனிமே உருத்திராக்கத்தை மாத்திரம் அணிதல் கூடாவாம உருத்திராக்கத்துடன் சொற்ப பொன்னும், பவளமுமிருத்தல்வேண்டும் இதுவிஷயத்தை விரிக்கிற் பெருகுமாகலால், சிறக்கி விஷயத்தைமாத்திரம் கூறினோம் இவைதை ஸ்கந்தபுராணத்திற் றெளிவாய் காணலாம் போன்றாம் இவைதிவ்வாறாக! இனி சிவாலயஞ் சென்று, வணங்குகின்றோர்க்கும், விஷ்ணுவாலயம் சென்று வணங்குவோர்க்கும் அதனது விதிகளையும் ஸ்ரீபஞ்சாக்கர முற்பத்தியையும் கிஞ்சிறறு கூறுவாம். ஸ்ரீபஞ்சாக்கரமென்பது ஓம்! என்னும் பிரணவம் நீத்து, "நமசிவாய" என்னும், அக்கரம் ஐந்தாம். இவ்வக்கரமானது உலகத்தினிடத்திலுயர்ப்பத்தியான மானிடமுதல், மற்ற சீவசெந்துக்களனைத்திற்கும், ஆதாரம் ஆறென, ஏற்பட்டிருக்கின்றன; அவையாவன:— மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, யாக்ஞையென ஆறும், இதில் மூலாதாரத்தில், ஓம் என்னும் பிரணவாக்கரமும், அப்பீடத்தின்மேல் ஸ்ரீகணநாதர், வல்லபை சமேதராக வெழுந்தருளியிருப்பர். ஆதலால், அவர்க்கு மூலதாரப்பொருள் என பெயருண்டாயது. அதற்குமேல் சுவாத்திட்டானத்தில நகரவெழுத்து, அந்நக வெழுத்தாகிய பீடத்தின்மேல் பிரமன் வாணியுடனமர்ந்திருப்பர். அதற்கு மேல் மணிபூரகத்தில் மகரவெழுத்து நிற்கும் அம்மகரவக்கரமாகிய பீடத்தின்மேல் மகாவிஷ்ணுலக்ஷ்மியுடனமர்ந்திருப்பர். அதற்கு மேல் அநாகத்தில் சிகரவெழுத்து நிற்கும் அச்சிகரபீடத்தின் மேல் சம்பீசன் பார்வதி சமேதராக வெழுந்தருளியிருப்பர். அதற்கு மேல் விசுத்தி

யில் வகரவெழுத்து நிற்கும் அப்பீடத்தின் மேல் மகேஸ்வரன் மகேஸ்வரியுடனமாந்திருப்பர். அதற்கு மேல் ஆக்ஞையில் யகரம் லலாடபீடமாம். அதுவே வெளியென்னப்படும் அதில், சதாசிவம் மனோன்மணியிருத்தலாம் இம்முறையே சிவாலயச்சேவை செய்யப்புகுவோர். முன் ஸ்தூலலிங்கமாகிய, கோபுரத்தை விதிப்படி நமஸ்கரித்து பின்னர் ஸ்தலத்துட்சென்று, முறையே விநாயகரை தரிசித்து பலிபீடத்திற்கிப்பால் நின்று சேவித்து நமஸ்கரித்து பின்தெற்குப்பிரகாரஞ்சென்று தக்ஷிணாமூர்த்தியைக்கண்டு சேவித்து, மேற்கு பிரகாரத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமுருகக்கடவுளை தரிசித்து பின்னர் வலம்வந்து நடராஜமூர்த்தி சிவகாமியம்மையையுங் கண்டு சேவித்து வீரபத்திரர், பைரவமூர்த்தியைச் சேவித்து பின் பலிபீடத்திற் கிப்பால் பூமிவிழுந்து ஏகாங்கம் திரியாங்கம், பஞ்சாங்கம் அஷ்டாங்கம் ஆகிய விதிப்படி நமஸ்கரித்து எழுந்து விபூதியணிந்து நந்தியம் பெருமானிடஞ்சென்று அவரது இருகொம்பின் வழியாக மூலஸ்தானத்திலுள்ள சிவலிங்கத்தைத் தெரிசித்து நந்தீஸ்வரரிடத்திலுத்திரவு பெற்று பின் அகத்திற்சென்று சிவலிங்கத்தையாங்கு நமஸ்கரியாது மேற்படி சிவலிங்கத்திற்கு வலதுபுரம் நின்று இருகரமும் சிரமேற்குவித்து தோத்திரஞ் செய்து தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா பல்லாண்டு கோயிற் புராணமும் விதிப்படி யோதி விபூதிவாங்கி பின் மூன்றடி வந்து நெற்றியில் கீழே விழாதபடி யணிந்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரித்தணிந்து கொண்டு பின்னும் தலத்தை வலம் வருதல் வேண்டும். 3. 5. 7. 9. 11. இவ்வண்ணம் சிவாலயத்திக்கு ஒற்றப்படையாகவும் அம்பாள் சன்னிதிக்கும் விஷ்ணுவாலயத்திற்கும் இரட்டையாகவும் வலமும் நமஸ்காரமுஞ்செய்து முடிவில் கோமுகத்திற்கருகில் வீற்றிருக்

ருப் சண்டிகேச்வரரிடம் சென்று யான் கோரிவந்து சிவ பெருமானை தரிசனஞ்செய்த பலனைத்தரும் பொருட்டு சிவ பெருமானுக்கு உரைத்தல் வேண்டுமென்று இரண்டுகரமுஞ் சேரத்தட்டி யுரைசெய்து விட்டு பலிபீடத்தருகில் வந்து முன்போல நமஸ்கரித்து எழுந்து கைகூப்பி வணங்கியுட்கார் ந்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை யிறன்றவளவு 10-உருவாகினும் செபித்து விபூதிதரித்து கோபுரவாயலிலுட்கார்ந்து 10-உரு வாயினும் ஸ்ரீபஞ்சாக்கரத்தை செபித்து விபூதியணிந்து நந் தீச்வரரிடத்தில விடைபெற்று முன் ஆலயத்துள் எந்த கோபுரவாயல் வழியாகச சென்றோமோ! அவ்வாயல் வழி யாகவே மீண்டும் வருதல வேண்டும். இவ்விதியை இங்கு சுறிக்கிக்கூறினோம். இவ்விதியான சூ ஆசமத்திலும் சிவாலய விதி யென்னும் புத்தகத்திலும் விரித்துக் கூறப்பட்டிருக் கின்றன மேற்கூறிய ஸ்ரீபஞசாக்கரத்தின் மகிமையினு லன்றே! நந்திருநாவுக்கரசு சுவாமிகளை கருங்கல்லோடு பிணைத்து கடலிலிட்ட காலத்தும்,

“ சொற்றுணை வேதியன் சோதிவானவள்,
பொற்றுணை திருந்தடி, பொருந்துகைதொழ
கற்றுணைப்பூண்டி யோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது, நமசிவாயவே. ”

என்றுபாட கல்லும் தெப்பமாக மிதந்தது. நிற்க! ஓடுகின்ற னன் கதிரவன் அவன்பின்னேடுகின்றன ஒவ்வொரு நாளாய், வீடுகின்றனை யென்செய்வோ மினிவெய்ய கூற்றுவன் வெகு ண்டிடிலனரே, வாடுகின்றனை யஞ்சலென் நெஞ்சே மார்க் கண்டேயர் தம் மாண்பறிந்திலேயோ, நாடுகின்றவர் நாதன் றன் நாம நமச்சிவாயங்காண் நாம் பெறுந்துணையே என

வான்றோர் கூறினர். ஆதலால் தான் எல்லாம் சிவமயமே யாம். என நந்திருவங் காட்டடிகளும் கூறினர். விரிக்கிற் பெருகும் ஆகலாலிங்ஙன மிம்மட்டோடு சுருக்கி விஷயத்தை மாத்திரம் கூறினம் போன்றும்.

கும்பகோண ஸ்தலபுராண வசனம்

முற்றுப் பெற்றது.



போகர்

# பாக்கெட கொக்கோகம்

## மூலமும் - உரையும்
[இரண்டாம் பதிப்பு]

இதில் பூர்வீகத்தில் கொக்கோகமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய கொக்கோகசொரூபம், கொக்கோகம், மதன நூல், கொக்கோகநுட்பம், அமுதகிலைச்சக்கரம் அடங்கியது. அசல் போட்டோ ஆப்டோன் 64-படங்களுடன் கூடியது.

உலகிலுள்ள மனிதர்களில் அநேகர் கொக்கோகசாஸ்திரத்தை விரும்பி கேட்டுகொண்டதினால் யாங்கள் அநேகர் விருப்பத்தினால் யாங்கள் அநேகர் விருப்பத்தினால் பலவிதமாகிய சாஸ்திரங்களிருந்து முக்யமான பழைய கொக்கோக சாஸ்திரத்தையும் சேர்த்து படங்களுடனே அச்சிட்டு விற்பனை செய்கிறோம்.

இது பூர்வம் உமைக்கு பரமேஸ்வரன் சொல்ல, உமை நந்திகேஸ்வரருக்குச் சொல்ல, நந்தி பதினெண் சித்தர்களில் சிரேஷ்ட போகருக்குச் சொல்ல, போகர் கொக்கோகருக்குச் சொல்ல. கொக்கோர் சமஸ்கிருத பாஷையில் எழுதினார் அதனை அதிவீரராமபாண்டியன் தமிழில் பாட்டும் உரையுமாக எழுதினார். அந் நூலே இந நூலாகும். பாட்டும் உரையோடு அச்சிடப்பட்டிருக்கிறது. இல்லற வாழ்க்கைக்கு இன்றியமையாததால் ஒவ்வொருவரும் இடைவிடாது கைக்கனி போல் வைத்திருக்கும் பொருட்டு பாக்கெட் சைஸில் அச்சிட்டிருக்கிறது.

இதன் விலை ரூபா 2 0 0

**விநாயகபுராணவசனம்.**

படங்களுடன் விலை ரூபா 4 0 0

**ஸ்ரீ ஜெயகுமாரி அண்டு கம்பெனி,**
நெ. 12, சுப்ரமணிய முதலி தெருவு,
சௌகார்பேட்டை போஸ்டு, மதராஸ்.

# நாகபூஷணம்

கற்பை விளக்கும் அற்புத நாவல்

இந்த நாவல் இரத்தினம் பாரதேசத்து மாதர்கள் கற்பையும் புருஷரையும் காப்பாற்றுவதினிமித்தம் எவ்வித ஆபத்து வந்தாலும் கருதாமல் உண்மையை வெளிப்படுத்துவதில் மிக்க ஊக்கமுடையவர்கள் என்பதை விளக்க இந்த நாவல் பல அத்தாட்சிகளோடு விளங்குகிறது. இக்கதா நாயகியான நாகபூஷணம் தன் புருஷனுக்குவந்த ஆபத்தைத் தடுக்கத்தானே வக்கீல் வேடம்பூண்டு ரதிமன்றம் வியப்புறும்படி வாதித்து ஆபத்தில் சிக்கிய தன் புருஷனைக் காப்பாற்றுவதோடு உண்மைக் குற்றவாளிகளையும் வெளிப்படுத்துகிறாள். கதை முற்றிலும் வெகு ஸ்வாரஸ்யமாயிருக்கும் கோர்ட்டுவிவாதம் வெகு ருசிகரமாயும், சாமர்த்தியமாயுமிருக்கும். இதன் விலை அணு 12.

# அயத்தங்க திராவகம்.

## இதுவே தேகபோஷக காருண்ணிய சஞ்சீவி

இருப்பவன் இரும்பைத் தின்பான் போகிறவன் பொன்னைத் தின்பான் என்னும் உலக வாக்கியத்தின்படி இரும்பின் சத்தை யுட்கொள்பவர்களுக்கு நரை, திரை முதலிய சரீரத் தளர்ச்சி சீக்கிரத்தில் உண்டாகாது. தாது விருத்தியை அதிகப்படுத்தி சரீரத்தை திடப்படுத்தக்கூடிய மருந்துகளில் இதைவிட சிறந்தது வேறொன்றும் யில்லை. அயத்தினுடையவும் தங்கத்தினுடையவும் சத்தைத் திராவகமாக இறக்கியிருக்கும் இந்தப் பரமசிரேஷ்டமான ஔஷதத்தை உட்கொள்வர் தேக வஜ்ஜிர சரீரமாகுமென்பதும் உண்மை. ஒரு முறை உபயோகப்படுத்திய யாவருக்கும் அன் மகிமை விளங்கும்.

| | | | |
|---|---|---|---|
| 20-நாள் மருந்து புட்டி | 1 | 2 | 0 |
| 40-நாள் மருந்து புட்டி | 2 | 0 | 0 |

**ஸ்ரீ ஜெயகுமாரி அண்டு கம்பெனி,**

நெ–12 சுப்ரமணிய முதலி தெருவு,

சௌகார்பேட்டை போஸ்டு, மதராஸ்.

# சிட்டுக்குருவி லேகியம்.

அசுர குருவாகிய துவட்டாவின் புத்திரன் விசசுவ ரூபனை இந்திரன் சங்கரிக்க, அவன் மூன்று தலைகளும் கிச்சிரி காடை சிட்டுக் குருவிகளாயின, எவ்வகையுஞ் சலிப்புறாத சிட்டுக்குருவி ஜீவ்வர்க்க பொருள்களில் முக்கியமானது. இந்த சிட்டுக் குருவிலேகியம் பலவிருத்தி தருவதில் கைகண்டது. சகல நோய்களையும் போக்கி ஆணையைப் போலாக்கும். ஆயிரக்கணக்காய் செலவாகிறது நல்ல அழகையும், இரதத விருத்தியையும், தாது புஷ்டியையும், வீரிய விருத்தியையும் ஆச்சரியமாகக் கொடுக்கும் ஒருதரம் வாங்கிப் பரீட்சித்தால் முதல் தினமே இதன் உண்மை தெரியவரும். இதில் அயம், காந்தம் வெள்ளி முதலிய பஸ்பங்கள் சேர்ந்திருப்பதால் அரை அல்லது ஒரு மண்டலம். புசிப்போருக்கு இழந்துபோன ஆண்மையை மறுபடி உண்டாக்கி விடுகிறது அதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. இதற்கு முன் எப்போதிந்தும் அடையாத ஆண் தன்மையையும் வீரிய விருத்தியையும், தேகதிட காத்திரத்தையும், அதிக வலுவையுங் கொடுத்து தேக இரத்தத்தைப் பரவச்செய்து வஜ்ஜிரதேக மாக்கிவிடும். நோயுள்ள ஸ்திரீகளைக் கூடினால் வரும் வெளளை, மஞ்சள் வெள்ளை, நீசுருக்கு, அரையாப்பு, கொருக்கு முதலிய நோய்களை வாங்கிக்கொண்டு, அந்நோய் நீங்கும் பொருட்டு பலவித மருந்துகளைத் தின்று அதினால் வெட்டை அதிகரித்து இரத்த முறிந்து முகம்வெளுத்து கண், கை, கால்களின் நகங்கள் வெளுத்து, அன்னத்து வேஷம் அக்கினி மந்தம், கை கால் எரிசசல், சத்தி, சோம்பல் முதலிய கொடிய வியாதியை யுடையோர் இந்த லேகியத்தை எண்ணிக்கையாக 48-நாள் யாதொரு பத்தியமுமின்றி சாப்பிட்டு வருவார்களானால் மேற்கண்ட ரோகங்களெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி சந்தான செல்வமடைந்து மகிழுடையார்கள் என்பதி தடையில்லை.

24-நாள் மருந்து ரூ. 2 8 0    48-நாள் மருந்து ரூ. 3 8 0

**ஸ்ரீ ஜெயகுமாரி அண்டு கம்பெனி,**
**சௌகார்பேட்டை போஸ்டு, மதராஸ்.**

### 7. கஸ்தூரி மாத்திரை.

பேதி, ஜுரம், ஜன்னி, இழுப்பு முதலிய குழந்தை வியாதிகளுக்கு கைகண்டமருந்து. வேளைக்கு $1\frac{1}{2}$–முதல் 1-மாத்திரை. 50-மாத்திரை ரூபா 1-4-0.

### 8. லவங்காதி மாத்திரை.

பேதி மாத்திரை. வாதபித்த வியாதிகளை ஹரிக்கும். வேளைக்கு 1-மாத்திரை. 50-மாத்திரை ரூபா 1.

### 9. சஞ்சீவி மாத்திரை.

வாதபித்த ஜுரங்களுக்கும் எல்லாம் குழந்தை வியாதிகளுக்கும் தக்க ஔஷதம். வேளைக்கு $\frac{1}{2}$-முதல் 1. மாத்திரை பேதியாகும். 50-மாத்திரை அணா 8.

### 10. விஷதாம்ஸு ரஸவடி.

மலேரியா, டைபாய்ட் முதலிய கொடிய ஜுரங்களுக்கு கைகண்ட மருந்து. வேளைக்கு 1–முதல் 2–மாத்திரை. 50-மாத்திரை அணா 10.

### 11. தாம்பூல மாத்திரை.

வாதபித்த நோய்களுக்கு வேளைக்கு 1-மாத்திரை தாம்பூலத்துடன் உபயோகிக்கவும். 50-மாத்திரை அணா 10.

### 12. வாதகஜாங்குஸ ரஸவடி.

பார்ஸ வாய்வு, கீல்வாய்வு முதலிய பலவிதமாக தேகத்தில் உண்டாகும் வலிகளுக்கு தக்கமருந்து. வேளைக்கு 1-முதல் 3-மாத்திரைகள். 50-மாத்திரை அணா 10.

| | விலை ஜாபிதா. | ரூ. | அ. |
|---|---|---|---|
| நெ-1. | பெட்டி ; 12 மேற்படி மருந்துகள் புட்டி 1-க்கு 50 மாத்திரை | 7 | 0 |
| ,, | தோல் பெட்டியில் | 10 | 0 |
| நெ-2. | புட்டி 1-க்கு பெட்டி; 25–மாத்திரை | 4 | 8 |
| நெ-3. | பெட்டி ; 6 மருந்துகள் புட்டி 1-க்கு 25-மாத்திரைகள் | 2 | 8 |

ஏஜெண்டுகள் இல்லாத எல்லா இடங்களுக்கு ஏஜெண்டுகள் தேவை.

டாக்டர் கோட்டா,

**ஜயராம் நாயுடு, (வைத்திய பூபதி)**

159, பிராட்வே, மதராஸ்.

# தன்வந்தரி ஔஷதாலயம்

சொந்தத்தில் சாஸ்திரமுறைப்படி தயாரிக்கப்பட்ட சகல ஆயுர்வேத [illegible] மருந்துகள் எங்களிடம் எப்பொழுதும் கிடைக்கும்.

## பிரசன்ன பியூஷா (ரிஜிஸ்டர்ட்)

தாது விருத்திக்குக் கைகண்ட ஔஷதம். சிறுவர் முதல் விருத்தர் வரையில் ஆண் பெண் இருபாலருக்கும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் உட்கொள்ளக்கூடியது. பித்த ஜுரம் போன்ற இரத்த தோஷ வியாதியால் [illegible] இருந்தவர்களுக்கு இன்றியமையாதது. நித்தம் உபயோகித்தால் இரத்த சுத்தி செய்து எலும்பிற்கு பலத்தைக் கொடுத்து சரீரத்தை திடப்படுத்தும். 8-அவுன்ஸ் புட்டி 1-க்கு ரூபா-3.

## ச்யவன பிராசம்.

தாது புஷ்டிக்கு சிலாக்கியமான ஔஷதம். சுவாசகோச சம்மந்தமான சகல வியாதிகளையும் நீக்கும். ஜல தோஷம், இருமல் சுவாசகாசம் முதலிய வியாதிகளுக்கு உத்திரவாதமுள்ள ஔஷதம்.

1-பவுண் புட்டி ரூ. 3 8 0

## வசந்த குசுமாகரம்

அரிக்கா-கோலா 40-மாத்திரை ரூ. 7 8 0

## சித்த மகரத்வஜம்

40-வேளைக்கு ரூ. 8 8 0

வைத்தியரை நேரில் காணமுடியாத நோயாளிகள் வியாதியின் விபரத்தை தெரிவித்தால் தபால்மூலம் மருந்துகளை அனுப்பி சிகிச்சை செய்யப்படும். ஸ்வர்ணம், முத்து, வெள்ளி, அப்ரகம் அயம், முதலிய பஸ்பங்கள் எங்களிடம் விற்பனைக்கு கிடைக்கும்.

## எங்கள் மருந்துகளை விற்க ஏஜண்டுகள் தேவை

(1) **டாக்டர். வி-கே. இராமன் பிள்ளை,**

மலையாள வைத்தியர் 25–பிராட்வே, சென்னை.

(2) 153-கோவிந்தப்ப நாயக்கன் தெரு,

ஜார்ஜ் டவுன் சென்னை.